வலிமையால்? உழுது பயிரிடப்படும் நிலங்களின் விளைச்சலாலன்றோ? ஆகவே, உழவருடைய குறைகளைப் போக்கி அவர்களைப் பாதுகாப்பது உமது முதற்கடமையாகும்,'' என்று அச்சம் சிறிதுமின்றி அரசனுக்கு அறிவு புகட்டினர். அரசனும், அவர் உள்ளத்தில் தோன்றிய உண்மையை உறுதியுடன் கூறிய அவருடைய குணநலனுக்காக அவரைப் புகழ்ந்து, உபசரித்து அனுப்பினன்.

## பயிற்சி

1. விடை எழுதுக :

(அ) 'சங்க இலக்கியங்கள்' என்பவை யாவை?

(ஆ) 'பெருஞ்சித்திரனர்' என்பவர் யார்?

(இ) 'அதியமான்' என்பவன் யார்? அவன் குணநலன்கள் யாவை?

(ஈ) பெருஞ்சித்திரனரின் உள்ளத்தின் உயர்வு எதனல் அறியப்படுகிறது?

(உ) 'நாகனர்' என்பவர் யார்? அவர் எங்கு வாழ்ந்தார்? அவர் அரசனைக் காண என்ன உபாயம் செய்தார்?

(ஊ) அவர் கிள்ளி வளவனுக்கு எடுத்துக் கூறிய நல்லுரைகள் யாவை?

2. எதிர்ச் சொற்கள் எழுதுக :

ஆக்கம், ஆழ்ந்து, அணுகி, இழிவு, வெறுப்பு, உத்தமன், நிறைந்தது, வெற்றி.

3. வாக்கியங்களில் அமைக்க :

தொன்மை, ஆக்கம், அறிவுரை, ஆற்றல், கருதினர், வள்ளல், பண்பு, ஏவலாளர்.

4. கீழே தரப்பட்டுள்ள குறிப்புக்களின் துணையால் சிறியதொரு கட்டுரை வரைக :

(அ) பெருஞ்சித்திரனரின் வறுமை.

(ஆ) அதியமான் கொடைத்திறம்.

(இ) பெருஞ்சித்திரனரின் பெருமிதம்.

5. பொருள் எழுதுக :

பெருமிதம், ஆக்கம், பண்பு, ஆற்றல், எடுத்துக்காட்டு, உவகை, யாசகன், நிதிச்சாலை, அளவளாவி, வாய்ப்பு.

# 10. ஒரு விநோதப் பாட்டு

'தமிழ்ப் புலவர்' என்னும் தொடருக்கு 'வறுமை' என்பது பொருள் என்றார் ஒருவர், வேடிக்கையாக! ஆராய்ந்து பார்த்தால், அது உண்மை என்றே புலப்படுகிறது. பண்டு முதல் இன்றளவும் தமிழ்ப் புலவர்களின் வரலாறுகளைப் படித்தால், அவர்கள் எல்லோரையுமே வறுமை என்னும் பிணி வாட்டி வந்துள்ளது என்பது வெள்ளிடை மலையாகும். ஏதோ இங்குமங்குமாகக் கம்பர், ஒட்டக்கூத்தர் என்பவரைப்போலச் சில தமிழ்ப் புலவர்கள் கல்விச் செல்வத்தோடு பொருட் செல்வமும் பெற்றிருந்தார்களெனில், அதை விதி விலக்காகவே கொள்ளவேண்டும்.

இங்ஙனம் வறுமையில் உழன்ற புலவர்களுள் ஒருவர், இராமச்சந்திரக் கவிராயர் என்பவர். அவர் தமிழில் வல்லுநர் ; எத்தகைய பொருளையும் எளிதில் அமைத்து இனிய பாடல்களை இயற்ற வல்லவர் ; பேச்சுத் திறமை நிரம்பப் படைத்தவர். அவர் பேச்சுக்கள் நகைச்சுவை மிக்கவையாய் இருக்கும். அவர் இயற்றிய பாட்டுக்களுட் சிலவும் அங்ஙனமே இருக்கக் காணலாம்.

ஒருநாள் மாலை நேரத்தில் புலவர் நெடுந் தொலைவிலிருந்ததோர் ஊருக்குப்போய்த் திரும்பித் தம்மூருக்கு வந்துகொண்டிருந்தார். அப்போது புலவருடைய நண்பரும், அவர் ஊரைச் சேர்ந்த வருமாகிய ஒருவர் அவரை இடைவழியிற் கண்டார். புலவர் நெடுந்தூரம் நடந்து வந்துகொண் டிருந்தபடியால், மிகவும் களைப்புற்றிருந்தார். மனச்சோர்வு காரணமாக அவருடைய முகமும்

சோர்வுற்றிருந்தது. அது கண்ட நண்பர், ‘அண்ணு! வணக்கம்!’ என்ருர்.

**புலவர்:** வணக்கம்!

**நண்பர்:** அண்ணு! நெடுந்தூரம் போய் வருகின்ருற்போலத் தோற்றுகிறது! யாராவது செல்வரைக் காணச் சென்றிருந்தீரோ?

**புல:** ஆம்.

**நண்:** அங்ஙனமாயின், பரிசில் ஏதுமின்றி வருகின்றீரே! ஏன்?

**புல:** ஏனு! சொல்கிறேன்; கேள்: நான் பரிசில் கேட்கச் சென்றவன் ஓர் உலுத்தன். முற்பிறப்பிற் செய்த நல்வினைப் பயனுக, இப்பிறப்பில் அவன் திரண்ட செல்வத்தைப் பெற்றுள்ளான்; அதனைப் பிறர்க்குக் கொடுத்து உதவாமலும், தானும் அதனுல் இன்புருமலும், அதைப் பூதம் காப்பதுபோலக் காத்துக் கொண்டிருக்கிருன். அத்தகைய உலோபியை வாயார வாழ்த்தினேன்! எழுத்தே அறியாத அவனைக் ‘கல்விக் களஞ்சியமே,’ என்றேன்; மாடுகளுக்கு மேய்ச்சலிடமாயுள்ள காட்டையும் விடாமல் திருத்தித் தன் நிலத்தின் அளவைப் பெருக்கிக்கொள்ளும் அவனை ‘நாடாளும் நல்ல அரசனே,’ என்று புகழ்ந்தேன்; நற்குணம் ஒன்றேனும் இல்லாத அவனை ‘உயர் குணங்களின் உறைவிடமே,’ என்றுரைத்தேன்; அண்டையூரிற் சண்டை நடந்தால் அடுப்பறையில் மறைந்துகொள்ளும் கோழையாகிய அவனைப் ‘போரில் புலி போன்றவனே,’ எனப் புகன்றேன். சுருங்கித் திரைந்த அவன் தோள்களை ‘மற்போருக்

குரிய புயங்கள்' எனப் புனைந்துரைத்தேன்; ஒருவருக்கும் ஒரு காசும் நன்கொடையாகக் கொடுத்தறியாத கைகளையுடைய அவனை 'வரையாது வழங்கும் வள்ளலே,' என்று கூறினேன். இவையனைத்தையும் அவன் இன் முகத்தோடு கேட்டுக் கொண்டிருந்தான். எனது வாழ்த்துரை முடிந்தது. அவ்வளவு தான்! அவன் முகத்தைப் பார்க்கவேண்டுமே?

நண் : முகம் என்னவாயிற்று!

புல : என்னவாயிற்ரு? நூறு கோணலாகச் சுளித்துக் கொண்டது! புருவம் நெற்றியிலேற, கண்கள் சிவப்பச் சினங்கொண்டெழுந்தான். உடனே யான் துணுக்குற்றுச் சற்றுச் சேய்மையிற் சென்றேன்.

நண் : பிறகு என்னவாயிற்று?

புல : என்னவாயிற்ரு? இடி யிடித்தாற்போலக் கனன்று பேசத் தொடங்கினன். அதைக் கேட்டு நானே ஆச்சரியமுற்றேன். ஒன்றுக்கும் பற்ருத ஒருவனைப் பலபடப் புகழ்ந்து பரிசில் பெறத்தக்க ஆற்றல் மிக்க புலவனுகிய யானும், வாய்திறந்து மறுவார்த்தை கூற வொட்டாமல் மடங்கிய, அவன் பேச்சுத் திறத்தை என்னென்று கூறுவது!

நண் : ஒன்றுக்கும் உதவாத அவன் அப்படி மிகைபடப் பேசியதுதான் யாதோ? கூறுங்கள்; கேட்போம்.

புல : கூறுகிறேன்; கேள்: 'புலவரே, நீர் என்னைப் பித்தன் என்று நினைத்தீர்போலும்! நீர் என்னைப்பற்றி ஏதேதோ பிதற்றினீரே! அவற்றில் ஒன்றேனும் உண்மையா என்று

சிறிது சிந்தித்துப் பாரும்! இல்லாத செய்திகளை யெல்லாம் அடுக்கியடுக்கி நீர் என்னைப் பற்றிக் கூறினுல், அவற்றைக்கேட்டு ஆனந்தமடையும் மடமை என்னிடம் இல்லை. நான் எப்பொழுதும் உண்மையை மதிப்பேனேயன்றிப் பொய்யை மதிப்பதில்லை. என்னைப் பற்றி இல்லாதனவாகிய எத்தனையோ செய்திகளை நீர் எடுத்துரைத்தீர். ஆதலால் உமக்கும் ஒன்றும் இல்லை. போம்,' என்று கூறினுன். யானும் அத்தகைய அறிவற்ற உலோபியைப் பாடியது குற்றந்தான் என்பதை உணர்ந்துகொண்டேன்.

நண் : அண்ணு! நன்று, நன்று! இந்த நிகழ்ச்சி உலகத்தவர் அறிய வேண்டுவதொன்று. ஆதலின், இதனையே பொருளாக அமைத்து, ஒரு செய்யுளை இயற்றினுல், உங்கள் மனமும் ஆறுதலடையும்; உலோபிகளைப் பாடக்கூடாதென்பதற்கு அஃதோர் எடுத்துக்காட்டாகவும் இருக்கும்.

புல : நீ கூறுவது முற்றிலும் உண்மையே. உனது விருப்பப்படியே ஒரு செய்யுள் கூறுகிறேன், கேள் :

கல்லாத ஒருவனை நான் கற்ருய் என்றேன் ;
காடறியும் மறவனை நா டாள்வாய் என்றேன் ;
பொல்லாத ஒருவனை நான் நல்லாய் என்றேன் ;
போர்முகத்தை யறியானைப் புலியேறு என்றேன் ;
மல்லாரும் புயமென்றேன் சூம்பல் தோளை ;
வழங்காத கையனையான் வள்ளல் என்றேன் ;
இல்லாது சொன்னேனுக்(கு) 'இல்லை' என்ருன் ;
யானுமென்றன் குற்றத்தால் ஏகின் றேனே !

நண் : அண்ணு இப்பாட்டு எவ்வளவு அழகா யிருக்கிறது! எவ்வளவு இனிமையாயிருக் கிறது! பாட்டென்ருல் இதுவன்ரே பாட்டு! இத்தகைய நும் பாடலைக் கேட்டு நுமக்குப் பரிசில் வழங்காது அனுப்பினவன் மனித ரோடு வைத்து எண்ணத் தக்கவனல்லன் வாரும்; போவோம்.

### பயிற்சி

1. விடை எழுதுக :

(அ) இராமசந்திரக் கவிராயரைப் பற்றி நீ அறிந்தவை யாவை?

(ஆ) அவர் ஏன் பரிசில் பெருமல் 'திரும்பினுர்?

(இ) அவர் கூறிய பாட்டின் கருத்தைச் சுருக்கமாக எழுதுக.

2. எதிர்ச் சொற்கள் எழுதுக :

எளிது, நிரம்ப, சோர்வு, உலுத்தன், காடு நற்குணம், கோழை.

3. வாக்கியங்களில் அமைக்க :

புலப்படுகிறது, வெள்ளிடைமலை, விதி விலக்கு, உழன்ற, உலுத்தன், உறைவிடம்.

4. நீ இத்தகைய விநோதப் பாட்டு ஏதேனும் படித்திருக் கிருயா? படித்திருந்தால், ஒரு பாட்டை எழுதுக.

# 11. இளவரசர் துறவு

## (நாடகக் காட்சி)

**களம் :** வஞ்சிமாநகரத்தில் சேர மன்னன் கொலு மண்டபம்

**காலம் :** முற்பகல்

**பாத்திரங்கள் :** இமயவரம்பன், நெடுஞ்சேரலாதன், அவன் மூத்த மகன் செங்குட்டுவன், இளைய மைந்தர் இளங்கோ, மந்திரிகள், பிரதானிகள், சோதிடர்.

[இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் என்னும் சேரமன்னன் சிங்காதனத்தில் அமர்ந்திருக்கிறான். அவன் வலப்பக்கம் செங்குட்டுவனும், இடப்பக்கம் இளங்கோவும் பீடங்களில் இருக்கின்றார்கள். மந்திரிகளும், பிரதானிகளும் தங்கள் பீடங்களில் இருக்கின்றார்கள்.]

**இமயவரம்பன் :** அறிவு சான்ற அமைச்சர்களே! வெற்றி மிக்க வீரர்களே ! சின்னாட்களாக எம் சிந்தையிற் சில எண்ணங்கள் தோன்றி எம்மை இன்புறச் செய்கின்றன. அவற்றைக் கூறப் பெரிதும் விழைகின்றோம்.

**அமைச்சர் :** அவை யாவையோ ? வெளியிட்டால் யாங்களும் கேட்டு இன்புறுவோமன்றோ ?

**இமயவரம்பன் :** அங்ஙனமே கூறுவோம் : ஆண்டவன் அருள் வலியாலும், அமைச்சரின் அறிவுத்திறனாலும், படைத்தலைவரின் தோள் வன்மையாலும் யாம் அரியணையில் அமர்ந்த நாள் தொடங்கி இதுகாறும் எமக்கு வெற்றி மேல் வெற்றி கிடைத்து வருகின்றன : கடம்ப அரசர்களைக் கண்ணிமைப் போதில் போரிற் புறங்கண்டோம் ; தமிழ்நாடு முழுவதும்

அடிப்படுத்தி ஆட்சி பூண்டோம்; வட நாட்டின் கண்ணும் எமது புகழைப் பரப்பினேம்; இமயத்தில் எமது விற்கொடியைப் பொறித்தோம்; போர்களில் வெற்றியையும், புகழின் எல்லையையும் கண்டு களித்தோம். இனி யாம் எய்தி மகிழத் தக்கது, இவ்வுலகத்தின்கண் யாதொன்றுமில்லை; ஆதலின், அந்தமில் இன்பத்தை அடைய முயல்வதே எமது குறிக்கோளாயிற்று. உங்கட்குக் கூறி, மேல் ஆக வேண்டுவதைப்பற்றி ஆலோசிப்பதே எமது கருத்து.

ஓர் அமைச்சர்: மன்னர் மன்னரே, நுமது கூற்றுச் சாலச் சிறந்ததே! அருள், வலி, ஆண்மை, கல்வி என்னுங் குண நலன்களோடு திகழும் நும் மூத்தமைந்தர் செங்குட்டுவர்க்கு இளவரசுப் பட்டம் ஈந்தநாள் முதல், பொன் மலர் நாற்றமும் பெற்றுற்போல, நமது நாடு எல்லாத் துறைகளிலும் மேன்மேலும் முன்னேறி வருகின்றது. அன்றியும், கல்வி, அறிவு, ஒழுக்கம் முதலியவைகளிற் சிறந்து விளங்கும் நும் இளைய மைந்தர் இளங்கோ, 'பெருநம்பி' என்னும் பதவியை வகிக்கத் தொடங்கிய நாள் முதல், அவரே அமைச்சர் குழுவிற்குத் தலைமை தாங்கி அரசியற்காரியங்கள் அனைத்தையும் ஆழ்ந்த அனுபவமுள்ள எங்களைக் காட்டிலும் இங்கிதமாகக் கவனித்து வருகின்றூர். ஆதலின், அரசர்க்கரசே, நம் நாட்டு அரசியலைப் பற்றி எட்டுணையும் உமக்குக் கவலை வேண்டுவதின்று. எனினும், அரசியல் தேரை மேலும் சில ஆண்டுகள் நீரே செலுத்துவதை நும்

முடைய புதல்வர்களும், நாங்களும் விரும்பு கிறோம்.

[வாயிற்காவலன் வந்து அரசனை வணங்குகிறான்.]

**இமயவரம்பன் :** காவலோய்! ஏதேனும் அரியது உண்டோ?

**காவலன் :** மன்னர்க்கு மன்னரே! வணக்கம்! சோழ நாட்டினின்றும் ஒரு சோதிடர் வந்துள்ளார்; தங்களைக் காண விரும்புகிறார்.

**இமயவரம்பன் :** நல்லது; வரட்டும்.

[காவலன் போகின்றான். சோதிடர் அரசர்முன் வருகின்றார்.]

**சோதிடர் :** திக்கெல்லாம் புகழும் சேர மகிபரே! நுமக்கு மங்களமுண்டாகட்டும்!

**இமயவரம்பன் :** ஐயா, வாரும். (ஒரு பீடத்தைக் காட்டி) இதில் இரும். நீவிர் சோதிடம் வல்லவர் என்பதை வாயிற் காவலனால் அறிந்தோம். உண்மைதானே?

**சோதிடர் :** சேரர் பெருமானே! ஆம். நான் ஒரு சோதிடனே; கோட்சாரம் எதுவும் குறிக்காமலேயே, ஒருவருடைய உடல் அமைப்பைக் கண்டு அவருடைய எதிர்கால நிகழ்ச்சிகளைக் கூறவல்லேன்.

**இமயவரம்பன் :** அப்படியா! இது யாம் கேட்டறியாத விந்தை! நன்று! நன்று! நாம் இந்த அரச பாரத்தை இன்னும் எத்தனை நாள் சுமந்திருக்க வேண்டும் என்பதை உம்மாற் கூற முடியுமா?

**சோதிடர் :** வானவர் குலத்து மகிபரே! அங்ஙனமே கூறுகின்றேன். (சிறிது தாமதிக்கிறார்.)

**இமயவரம்பன் :** சோதிடரே, என்ன யோசிக்

கின்றீர்? உண்மையைக் கூறத் தயங்குவானேன்? சோதிடம் கூறுவதில் எதற்கும் அஞ்ச வேண்டுவதின்று. உண்மையை மறைக்காமல் வெளியிடும். மனக்கலக்கம் எட்டுணையும் வேண்டா.

**சோதிடர் :** மன்னர் பிரானாகிய உம்முடைய உறுப்பிலக்கணத்தை நுணுகி நோக்குங்கால், இறைவன் இன்னருளைப் பெறுதற்கு நீங்கள் நெடுங்காலம் காத்திருக்க வேண்டுவதில்லை.

**இமயவரம்பன் :** சோதிடரே! இதனைக் கூறுதற்கா இவ்வளவு அச்சம்! இச்செய்தியை யான் இன்புடன் வரவேற்கிறேன். நீர் வருமுன் இது பற்றியே நாங்கள் பேசிக்கொண்டிருந்தோம். இஃது இருக்கட்டும். (மூத்த மைந்தனைச் சுட்டி) இதோ அமர்ந்திருக்கும் இவன் எம் மூத்த மைந்தன்; செங்குட்டுவன் என்பது இவன் பெயர். (இளைய மைந்தரைச் சுட்டி) இதோ இருக்கும் இவன் எம் இரண்டாம் புதல்வன்; இளங்கோ என்பது இவன் பெயர். இவர்களைப்பற்றி நீர் என்ன கூறுகின்றீர்?

**சோதிடர் :** (அவ்விருவரையும் மாறி மாறிப் பார்த்த பின்) சேர நாட்டதிபரே! இந்த இருவருள் அந்தமில் இன்பம் அளிக்க வல்ல அரசை அடையப் போகிறவர் மூத்தவரல்லர்; இளையவரே.

[மன்னன் வியப்படைகின்றான்; அவையிலுள்ள அனைவரும் ஆச்சரியமுறுகின்றனர். செங்குட்டுவன் முகத்திற்கோபக்குறி தோன்றுகிறது; மன்னனையும், சோதிடரையும், இளங்கோவையும் மாறி மாறிப் பார்க்கின்றான். இவற்றைக் கவனித்த இளங்கோ தமது பீடத்தினின்று எழுந்து நிற்கிறார்.]

இளங்கோ : சோதிடரே! நீர் உமது கலையில் வல்லுநராய் இருக்கலாம். ஆயினும், காலத்தையும், நாட்டுப் பழக்க வழக்கங்களையும் துணைகொண்டு உண்மையை ஆராய்ந்து கூறவேண்டும். மூத்தவன் இருக்க இளையவன் அரியணையில் அமர்வது இந்நாட்டு வழக்கமன்று. முன்னோருடைய நெறியினின்று விலகுவது சேர நாட்டில் எஞ்ஞான்றுமில்லை. தருமத்துக்கு மிஞ்சிய சாஸ்திரம் ஏது? உமது



சோதிடம் பொய்த்தது என்பதை அறிய நீர் பலநாள் காத்திருக்க வேண்டா. சில நிமிடங்களுக்குள் கண்கூடாகக் காண்பீர். உமது கூற்று என் தந்தையாருக்கு மனக் கலக்கத்தையும், என் தமையனுருக்குச் சினத்தையும், அவையோர்க்கு அச்சத்தையும் விளைவித்துள்

ளது. அவற்றை இதோ ஒரு நொடியிற் போக்குவேன்! என் உறுதிமொழியை எல்லாருங் கேளுங்கள்: எல்லாம் வல்ல இறைவன்மீது ஆணை! தரும தேவதை இதற்குச் சாட்சி! என் தந்தையார் இதனைக் கேட்டு ஆறுதல் அடையட்டும்; என் தமையனார் அகம் மகிழட்டும்; அவையோர் கேட்டு என்னை ஆசீர்வதிக்கட்டும். நான் இன்றே-இப்பொழுதே-துறவு பூண்கின்றேன்; இதுவரையில் இவ்வரண்மனை எனது இருப்பிடமாய் இருந்தது. இனிக் குணவாயிலில் உள்ள கோவிலே எனது இருப்பிடமாயிருக்கும். இஃது உறுதி! முக்காலும் உறுதி! சோதிடரே, நீர் கூறியது உண்மை. இதுவரையில் யான் யுவராசனாய் இருந்தேன்; இனித் தவராசனாவேன்; உங்கள் அனைவர்க்கும் என் வணக்கம்! இதோ செல்கின்றேன்.

[அவையை விட்டு வெளியே போகின்றார்.]

[திரை விழுதல்]

## பயிற்சி

1. இக்காட்சியில் அடங்கிய கதையை உரைநடையில் எழுதுக.

2. இப்புத்தகத்தில் 15-ம் பாடத்தில் உள்ள கதையை நாடகக் காட்சியாக எழுதுக.

3. பொருள் எழுதுக:

சான்ற, விழைகின்றேன், அரியணை, புறங்கண்டோம், பொறித்தோம், அந்தமில் இன்பம், குறிக்கோள், பெருநம்பி, எட்டுணை, மங்களம், கோட்சாரம், மகிபர், உறுப்பிலக்கணம், எஞ்ஞான்றும்.



## 12. தென்முனை கண்ட தீரர்

நில உருண்டையின் வட, தென் முனைகளை ஆராய்ந்து அறியப் பலர் முயன்றனர். **ரோவால்ட் அமண்செனு** என்பவர் அவர்களுள் ஒருவர். அவர் நார்வே நாட்டினர். அவர் சிறந்த மாலுமி; அஞ்சா நெஞ்சம் படைத்தவர்; உலையா ஊக்க முள்ளவர்; எத்தகைய இடுக்கண் நேரிடினும் அதனை எள்ளிக் குறுநகை கொள்ளும் வழக்கமுடையவர்; அவர் வட, தென் முனைகளைக் கண்டு ஆராய விரும்பினார். அன்றியும், ஐரோப்பாவிலிருந்து வடமேற்குத் திசையிற்சென்று, ஆசியாவை அடையவேண்டு மென்பது அவரது பேராவல்.

அமண்சென், முதலில் சில கலங்களில் பணியாற்றி அனுபவமும் புகழும் பெற்றார்; ஆதலால், தென்முனையை ஆராய்வதற்குப் புறப்பட்ட பெல்ஜிகல் என்ற கப்பலின் தலைவராய் நியமிக்கப் பெற்றார். அவர் தீரம் மிக்க தம்முடைய துணைவர்

களுடன் கலத்தைச் செலுத்திக் கொண்டு தென் விக்டோரியாலந்தை அடைந்தபோது, அக்கலம் உறைபனியிற் சிக்குண்டது. மாலுமிகளுள் சிலரைக் கடல்நோய் பற்றியது. சிலர் தம் மனநிலையிழந்து பயத்தால் பீடிக்கப்பட்டனர். ஆனால், அமண்செனன் நம்பிக்கை இழக்கவில்லை. நெடுநாட்கள் சேகரித்து வைக்கப்பட்ட உணவைக் கைவிட்டுப் புதிதாய்த் தயாரித்த உணவை உண்டால் கடல்நோய் தீரும் என்பதை அவர் அறிவார். ஆதலால், அளவற்ற துன்பங்களுக்கிடையே, அவர் தம் கலத்தை விட்டுத் தொலைவிற்சென்று, பறவைகளையும் மீன்களையும் பற்றிக்கொண்டு வந்து, அவற்றைச் சமைக்கச் செய்து, நோயுற்றவர்கட்கு அளித்து வந்தார். அதனால் மாலுமிகள் நோய்நீங்கப் பெற்றார்கள். பின்னர், பனிப்படலம் கரைந்து, கலத்தைச் செலுத்தக்கூடிய நிலை தோன்றியபோது, அமண்செனன் தம் நாடு திரும்பினார்.

சின்னாட்களுக்குப் பிறகு, தீரம் மிக்க அறுவரைத் தமக்குத் துணையாகக் கொண்டு, அமண்செனன் ஒரு மீன் கலத்திலேறி, வடமுனை நோக்கிப் புறப்பட்டார்; தம் கலத்தை மெல்ல மெல்லச் செலுத்திப் பீல் சௌண்டு என்னுமிடத்தை அடைந்தார். அதற்கப்பால், அவர்களுக்கு முன் வேறெவரும் சென்றதில்லையாதலால், வழிப்படத்தின் உதவியின்றி, தட்டுத்தடுமாறிக் கலத்தைச் செலுத்திக்கொண்டு, வழிப்படமொன்றையும் தயாரித்துக்கொண்டே சென்றார் அமண்செனன். ஒரு நாள் கடும்புயல் வீசத் தொடங்கியது. கலம் கட்டுக்கு மீறிச் செல்லலாயிற்று. பேரலையொன்

ருல் தாக்கப்பட்டுக் கலத்தின் துடுப்பு அதன் அச்சை விட்டு அகன்றது. கலமும் ஒரு பாறையை அணுகியது. அரைக்கணத்தில் தங்கள் ஆயுள் முடிந்துவிடும் என்று எண்ணினர்கள் அமண்செனும், அவர் நண்பர்களும்.

ஆனல், ஆண்டவரது அருள்திறத்தை என்னென்று புகழ்வது! மற்றெரு பெருந்திரை மறுகணத்தில், வழிதப்பிப் பாறையில் மோதவிருந்த கலத்தை அதன் வழியிற் சேர்த்தது; மற்றுமொரு பேரலை, அச்சை விட்டகன்ற துடுப்பை மீண்டும் தன்னிலையடையச் செய்தது. அனைவரும் அகம் மிக மகிழ்ந்து, ஆண்டவரைத் துதித்தனர். அமண்சென் மிகுந்த விழிப்புடன் கலத்தை மெல்லச் செலுத்தி, இக்காலத்தில் 'வில்லியம் அரசர் தீவு' என வழங்கும் தீவை அடைந்தார். கலம் ஏற்றதோர் இடத்தில் நிறுத்தப்பட்டது. அமண்செனும், நண்பர்களும் தீவிற்சென்று, தங்குமிடங்களை அமைத்தார்கள். அப்போது அங்குக் குளிர்காலம் தொடங்கிவிட்டபடியால், அவர்கள் அங்கேயே தங்க நேரிட்டது. அமண்சென் ஆங்கோர் ஆய்கூடத்தை ஏற்படுத்தினர். அதற்கு வேண்டிய **'மாக்னெட்டிக்கு நீடில்'** என்று கூறப்படும் **இழுதிறன் ஊசிகளையும்**, அவற்றை அமைத்தற்கான சலவைக் கற்களையும், வெப்பதட்பங்கள் அவற்றைத் தாக்காமல் மூடுவதற்கான செப்பாணிகள் அறைந்து ஆக்கப்பெற்ற பெட்டிகளையும் அமண்சென் தம்முடன் கொண்டு சென்றிருந்தார்.

அமண்சென் சில உண்மைகளைத் தம் ஆராய்ச்சியால் அறிந்தார். நில உருண்டையின் வடமுனையில் இழுதிறன் உள்ளது என்பது நாம் அறிந்துள்ள

உண்மை. ஆதலாற்றான் இழுதிறன் ஊசி எப்போதும் தென் வடலாகவே நிற்கிறது. ஆனால், இந்த ஊசி குறிக்கும் வடதிசையானது வடமுனை வான்மீன் உள்ள திசைக்குச் சற்று மேற்கிலோ அல்லது கிழக்கிலோ உள்ளது. இவ்வூசி, சில தருணங்களில் முன் காட்டிய திசையைக் குறிக்காமல் சிறிது மாறுபடுவதும் உண்டு. ஆதலால், இழுதிறமுள்ள இடம் வடமுனையில் இடம் மாறி வருகின்றது போலும் என அவர் அறிந்தார்.

இங்ஙனம் அமண்சென் தம் ஆராய்ச்சியை நடத்திக்கொண்டு பல மாதங்கள் அத்தீவிலேயே தங்கியிருந்தார். அக்காலத்தில் அவர்கள் சுற்றுப்புற இடங்களுக்குச் சென்று, துருவக்கரடிகளையும், கலைமான்களையும் வேட்டையாடிக்கொண்டு வருவார்கள். ஒரு நாள் அவர்கள் எதிர்பாராமல் சில மக்களைக் கண்டார்கள். அம்மக்களே அப் பனிப் பிரதேசத்தில் வாழும் எஸ்கிமோக்கள். அவர்கள் வாழ்க்கையைப் பற்றி நீ நன்கு அறிவாயன்றோ?

கோடைகாலம் தொடங்கியவுடனே, அமண்செனும், நண்பர்களும் மேலும் வடக்கு நோக்கிச் சென்றார்கள். செல்லும்போது, அவர்கள் திமிங்கில வேட்டையாடுபவரின் கலங்களைக் கண்டார்கள். அப்போதுதான் வட அமெரிக்காவின் வடக்கில் உள்ள அலாஸ்காவுக்கு வடக்கே தாங்கள் வந்திருப்பதை அமண்சென் அறிந்து, ஆனந்தம் அடைந்தார். அவர் சென்ற வழியே, அவர் கண்டறிய ஆவல் கொண்டிருந்த வடமேற்கு வழியாய் அமைந்தது.

ஆசியாவுக்கு வடமேற்கு வழி கண்ட அமண்சென் அகமகிழ்ச்சியுற்றுத் தம் நாட்டுக்குத் திரும்

பினர். நார்வே நாட்டினர், அவர் அடைந்த வெற்றியைத் தம்முடையதாகவே கருதி மகிழ்வுற்றனர்.

சில மாதங்களுக்குப் பிறகு, அமண்செண் நில உருண்டையின் தென்முனையைச் சூழ்ந்துள்ள தென்சமுத்திரப் பகுதியை ஆராய முற்பட்டார். அவர் 1910-ஆம் ஆண்டில் தென்முனை நோக்கிப் புறப்பட்டார். அப்போது **ஸ்கார்டு** என்னும் ஆங்கிலேயரும் தென் சமுத்திரப்பகுதியை ஆராய முனைந்திருந்தார் என்பதை அறிந்த அமண்சென், அவருக்குத் தம் முயற்சியைப் பற்றி ஒரு கடிதம் எழுதிவிட்டுத் தம் பயணத்தை மேற்கொண்டார். 1911-ஆம் ஆண்டில் நில உருண்டையின் தென்முனையில் அடி வைக்கும் பேறு, அமெண்செனுக்குக் கிட்டியது. அவருக்கு முன் செல்ல விரும்பிய ஸ்காட்டு, எதிர்பாராத இடையூறுகளால் அவ்வாறு செய்ய முடியவில்லை. அமண்சென் தாம் மேற்கொண்ட முயற்சியில் வெற்றி பெற்றுத் தாய்நாடு திரும்பிய போது, அவர் புகழ் உலகம் முழுவதும் பரவியது.

தாய்நாடு திரும்பிய அமண்சென், சின்னாட்களில் வானூர்தியிற் சென்று வடமுனைப் பகுதிகளை ஆராய்ந்து விட்டுத் திரும்பினர். ஆகவே, நிலவுருண்டையின் வட, தென் முனைகளைக் கண்டதன்றி, ஆசியாவுக்கு வடமேற்கு வழியையும் கண்ட அமண்சென், உலகப் பெருமக்கள் வரலாற்றில் இடம்பெற்றுத் திகழ்கின்றனர்.

## பயிற்சி

1. விடை எழுதுக :

(அ) ‘அமண்சென்’ என்பவர் யார்? அவரது ஆவல் யாது?

(ஆ) அவர் செய்த முதற்பிரயாணம் எது ?

(இ) தென் விக்டோரியாலந்தில் தம்முடைய மாலுமிக ளுக்கு உண்டான கடல்நோயை அவர் எவ்வாறு நீக்கினார்?

(ஈ) வடமுனை நோக்கிச் சென்றபோது அமண்செனுக்கு ஏற்பட்ட இன்னல்கள் யாவை?

(உ) அமண்செனும், அவர் நண்பர்களும் வில்லியம் அரசர் தீவில் என்ன ஆராய்ச்சி நடத்தினார்கள்?

(ஊ) வடமுனையை ஆராயச் சென்ற அமண்சென், எவ் வழியை எப்படிக் கண்டறிந்தார்?

(எ) அமண்சென் கண்டறிந்த பிற இடங்கள் யாவை?

2. கீழே தரப்பட்டுள்ள ஒவ்வொன்றைப் பற்றிக் குறிப் பெழுதுக:

(அ) அமண்செனின் வடமுனை ஆராய்ச்சி

(ஆ) அவரது தென்முனை ஆராய்ச்சி

(இ) இழுதிறன் பற்றிய அவரது ஆராய்ச்சி

3. வாக்கியங்களில் அமைக்க:

அஞ்சாநெஞ்சம், உலையாஊக்கம், ஆவல், மனநிலை, பனிப்படலம்.

4. சொல்லியுள்ளபடி செய்க:

(அ) ரோவால்ட் அமண்சென் அவர்களுள் ஒருவர்.
அவர் நார்வே நாட்டினர்.
அவர் சிறந்த மாலுமி.
அவர் அஞ்சா நெஞ்சம் படைத்தவர்.
அவர் உலையா ஊக்கம் உள்ளவர்.
(இவற்றை ஒரே வாக்கியமாக எழுதுக.)

(ஆ) அவர் 'பெல்ஜிகல்' என்னும் கப்பலின் தலைவராக் கப்பட்டார். (செயப்பாட்டு வினையைச் செய்வினையாக மாற்றி வாக்கியத்தை அமைக்க.)

(இ) அவர் மனநிலை இழந்து தடுமாற்ற முற்றார். (தடித்த எழுத்தில் உள்ள தொடருக்குப் பதில் வேறு தொடர் எழுதுக.)

5. பொருள் தருக:

உலையா, ஊக்கம், இடுக்கண், குறுநகை, கலம், பனிப் படலம், அருள், திணறு, ஆய்கூடம், இழுதிறன், உடுக்கள், வடமுனை, வடமீன்.

## 13. கிறிஸ்து மகானின் அருள்வாக்கு

இக்காலத்தில் உலகில் அனுஷ்டிக்கப்பட்டு வரும் மதங்கள் பலவாம். இவற்றுள் பெரும்பான் மையாரால் மேற்கொள்ளப்பட்டுள்ளவை சிலவே. கிறிஸ்து மதம் அவற்றுள் ஒன்ருகும். அஃது இயேசு நாதர் என்னும் மகானுல் தோற்றுவிக்கப் பட்டது. அம்மகான் தம் ஆயுட் காலத்தில் திருவாய்மலர்ந்த பொன்மொழிகள் கணக்கற் றவை. அவற்றுள் முக்கிய மான சிலவற்றையேனும் நாம் அறிய வேண்டுவது அவசியமாகும்.



ஒரு நாள் கிறிஸ்துவைச் சூழ்ந்து அவருடைய சீடர்களும் வேறு பல மக்களும் கூடியிருந்தார்கள். அப்போது இயேசுநாதர் அவர்களுக்குக் கீழ்வரும் சில பொன்மொழிகளைப் புகன்றருளினுர்.

"இறைவனுல் படைக்கப்பட்ட எல்லா மக் களும் சகோதரர்களே. ஆதலின் ஒவ்வொருவரும் மற்றவர்களைச் சகோதரர்களாக எண்ணி, அவர் களிடம் அன்பு பாராட்டி, ஒன்றுபட்டு வாழ வேண்டும். நீங்கள் எப்போதும் சமாதானத்தையே நாடவேண்டும்; கொலை, களவு, கோபம், பொய், முதலிய தீக்குணங்கள் உங்களை அணுகாதவாறு காத்துக்கொள்ள வேண்டும். உங்கள் மனம், வாக்கு, காயம் ஆகிய மூன்றும் தூய்மையுடைய வையா யிருக்கவேண்டும். தீய செயல்களைப்பற்றி

மனத்தால் நினைத்தலே தீமை பயக்குமெனின், மற்றவைகளைப் பற்றிக் கூறவேண்டா.''

'' உங்களில் ஏழையொருவன் இருப்பானுயின், அவனுக்குப் பண உதவி செய்தல் வேண்டும். நோயாளி ஒருவன் இருப்பானுயின், அவனுக்குத் தக்க சிகிச்சையும், உதவியும் புரிதல் வேண்டும். உங்களுக்குப் பகைவர்கள் இருப்பின், அவர்களுக் குத் தீங்கிழைக்க எண்ணுமல், அவர்களிடம் அன்பு பாராட்டுவதோடு அவர்களை நல்வழிப்படுத்துமாறு ஆண்டவனை வழிபடவும் வேண்டும்.

'' நீங்கள், உங்களிடத்தில் மற்றவர் அன் போடும் மரியாதையோடும் நடந்துகொள்ள வேண் டும் என்று விரும்புவது போலவே, நீங்களும் மற்றவரிடத்தில் அன்போடும், மரியாதையோடும் நடந்துகொள்ள வேண்டும்.

'' நீங்கள் பிறரைக் குறை கூருதிருத்தல் அவசியம். நீங்கள் பல குற்றங்களைச் செய்கிறீர்கள். ஆனுல், அவற்றுக்காக நீங்கள் தண்டனையடைய விரும்புவதில்லை. மற்றவர் உங்களை மன்னிக்க வேண்டும் என்று விரும்பும் நீங்கள், பிறர் குற்றம் செய்தால் மன்னிக்கத் தயாராய் இருத்தல் வேண்டும்.

'' நீங்கள் நற்காரியங்களைச் செய்யும்போது அவை உங்கள் கடமையென்று கருதிச் செய்தல் வேண்டுமே அன்றிப், புகழை விரும்பிச் செய்தல் கூடாது. ஏழைகட்குப் பொருள் உதவி செய்தால், அதைப்பற்றிப் பிறர்க்கு அறிவியாதிருத்தல் வேண் டும். வலக்கை கொடுத்ததை இடக்கை அறியா திருத்தலே சாலச் சிறந்தது என்பதை நீங்கள் நினைவில் வைத்தல் வேண்டும்.

"கடவுளை நோக்கி ஜெபம் செய்யும்போது அதைப் பிறர் கண்டு போற்றவேண்டும் என்னும் எண்ணத்துடன் அனைவரும் கேட்குமாறு இரைந்து செய்தல் கூடாது. இறைவர், நீங்கள் எங்கிருந்து ஜெபம் செய்தாலும் அதை அறிந்து கொள்ளும் சர்வ சக்தி வாய்ந்தவராதலின், மனத்தை ஒருமைப் படுத்திக் கொண்டு ஒருவருக்கும் கேளாமல் தனியே ஜெபம் செய்வதே மிகவும் சிறந்தது.

"இறைவரை இறைஞ்சும்போது, இது வேண்டும், அது வேண்டும், என்று கேளாதீர்கள். உங்களுக்கு வேண்டுபவை எவை என்பதைக் கடவுள் நன்கறிவார். ஆகவே, கடவுளின் அனந்த கலியாண குணங்களைப்பற்றி நினைப்பதே கடவுள் வணக்கம். நீங்கள் செய்த பாவங்களுக்காக மனப் பூர்வமாக வருந்திக் கடவுளிடம் மன்றாடி மன்னிப்புக் கேட்பதே பிரார்த்தனையாகும்."

பிள்ளைகளே, மேற்கூறப்பட்ட ஏசுநாதரின் இனிய உபதேச மொழிகளை உங்கள் நினைவில் வைத்து, அவ்வாறே நீங்கள் வாழ்க்கையை நடத்தல் சாலச் சிறந்ததாகும்.

### பயிற்சி

1. விடை எழுதுக :

(அ) இயேசு யார்? அவர் தோற்றுவித்த மதம் யாது?

(ஆ) பகைவர்களிடத்தில் நாம் எவ்வாறு நடந்துகொள்ள வேண்டும்?

(இ) நாம் செய்யும் நற்காரியங்களின் நோக்கம் எதுவாக இருத்தல் கூடாது? கடவுள் வணக்கம் என்பது யாது?

2. பொருள் எழுதுக :

திருவாய்மலர்ந்த, ஒருமைப் படுத்தி, சாலச் சிறந்தது.

3. வாக்கியங்களில் அமைக்க :

ஜீவிய காலம், தீங்கிழைக்க, குறை கூறுதல், வணக்கம்.

## 14. தலையாலங்கானத்துப் போர்

தஞ்சை மாவட்டத்தில் உள்ள திருவாரூர் என்னும் சிவத்தலத்துக்கு அண்மையில் மற்றொரு சிவத்தலம் இருக்கிறது. தலையாலங்காடு என்பது அதற்கு இக்காலத்தில் வழங்கும் பெயர். அஃது ஏறத்தாழ இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன் **தலையாலங்கானம்** என வழங்கப்பட்டு வந்தது. அங்கு **நெடுஞ்செழியன்** என்ற பாண்டிய மன்னன் சேர, சோழ மன்னர்களையும், அவர்களுக்குத் துணையாய் வந்த சிற்றரசர் ஐவரையும் போரில் வென்று புகழை நிறுவினான். அப்போர் பண்டைக் காலத்தில் தமிழ்நாட்டில் நடைபெற்ற மிகப் பெரிய போர்களுள் ஒன்றாகக் கருதப்படுவது. அதன் வரலாற்றை அறிய நீ விரும்புகிறாய் அல்லவா?

நம் தமிழ் நாடு வடக்கில் **நெடியோன் குன்றம்** என வழங்கும் **திருப்பதி மலையையும்**, தெற்கில் **குமரி முனையையும்**, கிழக்கிலும் மேற்கிலும் கடல்களையும் எல்லைகளாகக் கொண்டிருந்தது என்பதை நீ அறிவாய். இதனைப் பாரதியாரவர்கள்,

"நீலத்தி ரைக்கட லோரத்திலே—நின்று
நித்தந் தவஞ்செய் குமரியெல்லை—வட
மாலவன் குன்றம் இவற்றிடையே—புகழ்
மண்டிக் கிடக்கும் தமிழ்நாடு."

என்று எழிலுறக் கூறியுள்ளார். இதன்கண் பண்டைக் காலத்தில் மூன்று பேரரசுகளும், சில சிற்றரசுகளும் விளங்கின. பேரரசுகள் மூன்றும் சேர, சோழ, பாண்டியர் என்ற முடியுடை வேந்தர் மூவரின் ஆட்சியிலிருந்தன. சிற்றரசுகளை ஆண்டவர்களுட் சிலர், இப்பேரரசர்கட்கு அடங்கியும், மற்றையோர் சுதந்தரமாகவும் வாழ்ந்து வந்தனர்.

இம் முடியுடை வேந்தர் மூவரும் அடிக்கடி தம்முள் மாறுபட்டுப் போர்புரிந்த நிகழ்ச்சிகள் பல, சங்க இலக்கியங்களிலும், தமிழ்நாட்டு வரலாற்றிலும் இடம் பெற்றுள்ளன. தலையாலங்கானத்துப் போர் அவற்றுள் ஒன்றும்.

தம் குண நலன்களாலும், போர்த்திறத்தாலும் புகழைப் பரப்பிய பாண்டிய மன்னருள் நெடுஞ் **செழியன்** என்பான் ஒருவன். அவன் ஏறத்தாழ ஆயிரத்தெண்ணூறு ஆண்டுகட்கு முன்னர் **மதுரையம்பதி**யைத் தலைநகராய்க் கொண்டு பாண்டி நாட்டை ஆண்டு வந்தான். இளைஞனா யிருந்தபோதே அரியணையிலமரும் வாய்ப்பு அவ னுக்குக் கிட்டியது. ஆயினும், அவ்விளம் பருவத்தி லேயே அளப்பரிய, ஆட்சித்திறம் படைத்திருந்த அவன் சீரிய முறையிற் செங்கோல் நடத்தி வந் தான். குடிகளின் நன்மையும், முன்னேற்றமுமே அவனுடைய குறிக்கோள். பயிர்த்தொழிலும், கைத் தொழிலும், வாணிகமும் அவன் ஆட்சியில் நலமுற் றுத் திகழ்ந்தன. அன்றியும், செழியர்பிரான் செந் தமிழ்ப் பாக்கள் இயற்ற வல்ல பெரும்புலவனாய் விளங்கினான். தமிழ்ப் புலவர்களையும், கூத்தர், பாணர், விறலியர் முதலிய பரிசிலர்களையும் இன் முகத்துடன் வரவேற்று, அவர்கள் அகமகிழப் பரி சில்கள் வழங்கும் பான்மையும் அவனிடமிருந்தது. இக்காரணங்களால் அவனுடைய புகழ் தமிழ் நாடெங்கும் பரவியது. அது கண்டு அழுக்காறுற்ற மற்றப் பேரரசர்களும், சிற்றரசர்களும் அவனுடன் பொருது, அவனைப் புறங்காட்டச் செய்து, அவ னது புகழை மங்கச் செய்ய விரும்பினார்கள்.

இத்தகைய புன்றொழில் புரிய முற்பட்டவன்

யானைக்கட்சேய் மாந்தரஞ்சேரல் இரும்பொறை என்பான். அவன் சேர நாட்டின் ஒரு பகுதியை ஆட்சி புரிந்து வந்தான். அவன் பெரும் படை ஒன்றைத் திரட்டிச் சென்று பாண்டி நாட்டைத் தாக்கினன். ஆயினும், மனவலியும் தோள் வலியும் மிக்க பாண்டிய மன்னன், அவனை எளிதிற் புறங்கண்டான். அதனால், அவன் புகழ் மேலும் ஓங்கியது. அது சேர சோழர்களின் பொறாமைக் கனலில் நெய் சொரிந்ததுபோல் ஆயிற்று.

சோழனும், சேரனும் நெடுஞ்செழியனை எவ்வாற்றானும் அழிக்க வேண்டும் என்னும் முடிவுக்கு வந்தனர்; தத்தம் படைகளைத் திரட்டினர். அவர்களுக்கு உதவியாக எழினி, எருமையூரன், இளங்கோவேண்மான், திதியன், பொருநன் ஆகிய சிற்றரசர் ஐவரும் தத்தம் படையோடு கிளம்பினர். எழுவர் படைகளும் ஒன்று திரண்டு பாண்டி நாட்டை நோக்கிச் சென்றன. பெருங் கடல் பொங்கி எழுந்ததுபோல முழக்கிக்கொண்டு சென்ற அக்கூட்டுப் படையில் இடம் பெற்றிருந்த எண்ணற்ற தேர்களையும், யானைகளையும், குதிரைகளையும், கணக்கற்ற காலாட்களையுங் கண்டார் அனைவரும் அச்சமுற்றனர். 'இத்துணைப் பெரும் படையை எங்ஙனம் எதிர்த்து நிற்பான் நெடுஞ்செழியன்!' என்றனர் பலர். 'அங்ஙனம் கூறுவது கூடாது. பாண்டியன் படை வன்மை மிக்கவன்; இளைஞனாயினும், ஏறு போலப் போர்புரிய வல்லவன்; இதற்குமுன் எத்தனையோ போர்களில் அவன் ஆற்றலை நாம் கண்டுள்ளோம். இப் போரிலும் அவன் வெற்றி பெற்றால், அதில் வியப் பொன்றுமில்லை,' என்றனர் சிலர்.

இங்ஙனம் பேரரசர் இருவரும், சிற்றரசர் ஐவ ரும் தன்மீது போருக்கெழுந்த செய்தியை ஒற்றர் வாயிலாயறிந்த நெடுஞ்செழியனுக்குச் சினம் மூண்டது. அவன் தன் படைத்தலைவரை விளித்து, " நம்முடைய நால்வகைப் படைகளையும் இன்றே திரட்டுங்கள். பகைவர் எம்மைப் பால் மணம் மாறாப் பாலன் என்றும், எமக்குப் போர்ப் பயிற்சி சிறிதும் இல்லையென்றும், தங்கள் பெரும் படையினை இமைப்போதுகூட எதிர்த்து நிற்கும் ஆற்றல் எம் படைக்கு இல்லையென்றும் பலவாருக இகழ்ந்து கூறியதாக நம் ஒற்றர் மூலம் அறிந் தோம். பால் மணம் மாறாப் பாலன் பாண்டியன் நெடுஞ்செழியனின் படைப்பயிற்சியை அம் முது பெரு வீரர்கள் கண்டு களிக்கட்டும்! எம்மை வலு வில் வம்புக்கிழுத்துப் போர்புரிய வரும் அப்பகை வர்களை யாம் தோல்வியுறச் செய்யாவிடில், எம் மைக் 'குடிகளை வருத்திய கொடுங்கோல் மன்னன்' என்று உலகம் இகழட்டும்! மாங்குடி மருதனுர் போன்ற பெரும்புலவர்கள் எம்மைப் பாடாமற் போகட்டும்!" என்று வஞ்சினங் கூறினுன்.

அரசனது ஆணைப்படி அன்றே படை திரட்டப் பட்டது. மறுநாட்காலையில் பாண்டி நாட்டுச் சேனை மதுரையம்பதிக்குப் புறத்தே நின்று பகைவர் சேனைக்கு நல்வரவு கூறியது. இரு பெரும்படைகளும் கடலோடு கடல் மோதுவது போலக் கடும்போர் புரிந்தன. தேரைத் தேர் கிட்டியது. யானையோடு யானை முட்டியது. குதிரையைக் குதிரை தாக்கியது. வீரர் வீரரை வீரர் எதிர்த்தனர். இதனுல் எழுந்த தூசுப்படலம் வானளாவி மேகமெனத் திகழ்ந்தது. இரு படை

களிலும் முரசங்கள் முழங்கின. சங்கநாதம் எழுந்தது. மேகங்கள் முழங்குவது போலப் பேரொலி பிறந்தது; வாளியொடு வாளியும், ஈட்டியொடு ஈட்டியும், வாளொடு வாளும் தாக்கியும், தடுத்தும், ஈர்த்தும், கோர்த்தும் நின்றநிலை, மேக முழக்கத்தோடு மின்னலும் மின்னுவதுபோலத் தோன்றியது.

பாண்டி நாட்டுச் சேனையின் பல முனைகளிலும் நெடுஞ்செழியன் தோன்றித் தன் வீரர்களை ஊக்கிக்கொண்டே இருந்தமையால், அவ் வீரர்கள் சிறிதும் சோர்வின்றிப் போர் புரிந்தார்கள். போர் மேலும் மேலும் கடுமையுற்ற போது, எழுவர் படை சோர்வடையத் தொடங்கியதுமன்றி, வீரர் தொகையும் சுருங்கத் தொடங்கியது. அதனைக் கண்ணுற்ற பாண்டி நாட்டு வீரர்கள் வெற்றியின் வாயிலைக் கிட்டிவிட்டதை உணர்ந்தார்கள்; மேலும் உக்கிரமாகப் போர் புரிந்தார்கள். அவர்கள் தாக்குதலை எதிர்த்துநிற்க மாட்டாமல், எழுவர் படையும் எடுத்தன ஓட்டம்! ஆனால், செழியர் பிரான் அவர்களை விட்டானில்லை. அவர்களைத் துரத்திச் சென்று தலையாலங்கானத்தில் முற்றிலும் முறியடித்து, வெற்றிபூண்டான். அன்று முதல் அவனுக்குத் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் என்னும் விருதுப்பெயர் வழங்குவதாயிற்று. அழுக்காற்றால் அவனை எதிர்த்த அரசர் எழுவரும் அவமானமுற்று அகன்றனர்.

பயிற்சி

1. விடை எழுதுக:

(அ) தலையாலங்கானம் எங்குள்ளது? அது எதனாற் புகழ் பெற்றது?

(ஆ) நெடுஞ்செழியன் புகழ் தமிழ் நாடெங்கும் பரவக் காரணம் யாது?

(இ) பாண்டியன்மீது சேரனும் சோழனும் கொண்டிருந்த பொருமை அதிகரிக்கக் காரணம் யாது?

(ஈ) தலையாலங்கானத்திற் போர் புரிந்தவர் யாவர்? அப் போரின் முடிவு யாது?

2. சொல்லியுள்ளபடி செய்க:

(கோடிட்ட இடங்களை அடுக்குச் சொற்களால் நிரப்புக.)

(அ) தேர்கள்——வென்று சென்றன.

(ஆ) குதிரைகள்——வென்று ஓடின.

(இ) வாள்கள்——வென்று மின்னின.

(ஈ) நெடுஞ்செழியன் பாண்டி நாட்டை ஆண்டு வந்தான். (வாக்கியத்தைச் செயப்பாட்டுவினை வாக்கியமாக அமைத்து எழுதுக.)

(உ) எழிலுற, பேரரசு, நலமுற்று, நாடெங்கும், சிற்றரசர். (இத்தொடர்களைப் பிரித்தெழுதுக.)

3. வாக்கியங்களில் அமைக்க:

மாறுபட்டு, நிகழ்ச்சி, சீரிய முறை, திகழ்ந்தது, இன்முகம், புறங்கண்டான், ஆற்றல்.

4. பொருள் எழுதுக:

அண்மை, நிறுவினன், எழிலுற, மாறுபட்டு, சீரிய, அழுக்காறுற்ற, பொருது, புன்தொழில், ஏறு, ஒற்றர், வஞ்சினம்.

# 15. சிவனுடன் வாதிட்ட செந்தமிழ்ப் புலவர்

மதுரையம்பதியைத் தலைநகராகக் கொண்டு பாண்டி நாட்டையாண்ட மன்னர்கள் தமிழ்ச் சங்கங்கள் நிறுவியும், தமிழ்ப் புலவர்களை ஆதரித்தும் தமிழன்னைக்குத் தொண்டாற்றினர்கள். அங்ஙனந் தோற்றுவிக்கப்பட்ட சங்கங்களுள் மூன்றாவதாகிய கடைச் சங்கத்தைத் தலைமை தாங்கி நடத்திய புகழ், நக்கீரனார் என்ற பெரும்புலவருக்குரியது. அவர் இயல், இசை, நாடகமென்னும் முத்தமிழிலும் வல்லுநர்; இலக்கிய இலக்கணங்களை ஐயந் திரிபறக் கற்றவர். அவர் காலத்தில் மதுரையை ஆட்சிபுரிந்த பாண்டிய மன்னர் வங்கிய சூடாமணி என்பவர்.

அம்மன்னர் ஒரு நாள் மாலை நேரத்தில் கோப்பெருந்தேவியாருடன் நிலாமுற்றத்தி லமர்ந்து உரையாடிக் கொண்டிருந்தார். அப்பொழுது பாண்டி மாதேவியார், தம் கூந்தலை ஆற்றிக் கொண்டிருந்தமையால், அதனின்றெழுந்த நறுமணம், அரசர் மனத்தில் ஐயமொன்றை எழுப்பியது. அம்மணம் அவ்வம்மையார் கூந்தலின் இயற்கை மணமா, அன்றிச் செயற்கை மணமா என்பதே அந்த ஐயமாகும்.

மன்னர் பெருமான் உடனே நூறு பொற்காசுகளை ஒரு கிழியிலிட்டு முடிந்து, அதைத் தமிழ்ச் சங்க மண்டபத்தில் தூக்கினர்; தம் ஐயத்தை அகற்றத்தக்க அரிய பாட்டினை யாத்துக் கொண்டு வருபவர் அக்கிழியைப் பெறலாம் என்று பட்டணம் முழுவதும் பறைசாற்றி அறிவிக்கச் செய்தார்.

அதனைச் செவியுற்ற புலவர் பலர், தத்தம் மனத்துக்கிசைந்தவாறு பாடல்களைச் செய்துகொண்டு வந்து பாண்டிய மன்னர்க்குப் பாடிக் காட்டினர். அவையனைத்தும் அரசர் ஐயத்தை அகற்ருமையின், புலவர்கள் வறிதேகன்றனர்.

அக்காலத்தில் மதுரை சோமசுந்தரப் பெருமான் ஆலயத்தில் அர்ச்சகராயிருந்த தருமி என்ற ஏழை அந்தணர், அப் பொற்கிழியைப் பெற்றுத் திருமணம் செய்துகொள்ள ஆசையுற்ருர்; இறைவர் திருமுன்னர் நின்று தம் விருப்பத்தை விண்ணப்பித்துக் கொண்டார். அன்பர் எண்ணியவற்றை அருள்புரியும் பெருமானுர், அந்தணர் வேண்டுகோட்கு மனம் இரங்கி, 'கொங்குதேர் வாழ்க்கை' என்னும் தொடக்கத்தினையுடைய ஒரு பாட்டு வரையப்பெற்ற ஓர் ஓலையை அவ்விடத்தே பீடத்தின் முன் இருட்டருளினுர்.

அவ்வோலையைக் கண்ட தருமி பெருமகிழ்ச்சியோடு அதை எடுத்துக்கொண்டு விரைந்து சென்று வேந்தர் முன் அப்பாட்டைப் பாடினுர். அதுகேட்ட அரசர், உவகையுற்று, "அந்தணரே, அருந்தமிழ்ச் சங்கத்தை அடைந்து, அரிய இச் செய்யுளை அங்குள்ள புலவர்க்குக் காட்டிப் பொற்கிழியைப் பெற்றுச் செல்லும்," என்று கூறினுர்.

அது கேட்ட மறையவர், மட்டிலா மகிழ்ச்சியுடன் மன்னரவையை விட்டகன்று, சங்க மண்டபத்தை அடைந்தார்; அரசர் ஆணைப்படி அங்கு வீற்றிருந்த புலவர்முன் தாம் கொண்டு சென்ற செய்யுளைப் பாடினுர்; பின்னர் அங்கிருந்த பொற்கிழியை அறுத்தற்பொருட்டு அதை அணுகினுர். அவ்வளவில் ஆண்டு அமர்ந்திருந்த அருந்தமிழ்ப்

புலவர் நக்கீரனார், "அந்தணரே, பொற்கிழியைத் தொடாதீர். நும் பாட்டு குற்றமுடையது," என்றார். அது கேட்டுத் தருமியின் மனம் புழுங்கியது. அவர் அங்கிருந்தகன்று, கோயிலிற் புகுந்தார்; இறைவர் திருமுன்னர் நின்று நடந்தவற்றைக் கூறி முறையிட்டார்.

உடனே ஆலவாய் அண்ணலார், மானிட வடிவெய்தி, ஒரு புலவர்போலச் சங்கத்தை அடைந்து, ஆங்கு வீற்றிருந்த புலவர்களைப் பார்த்து, "ஐயன்மீர்! குற்றமற்ற இக்கவிக்குக் குற்றம் கூறினவர் உம்முள் யாவர்?" என்றார். அப்போது நக்கீரர், "புலவரே! உம் கவிக்குக் குற்றம் கூறியவன் நானே," என்று தருக்குடன் புகன்றார். "நல்லது! நீர் இக்கவியிற்கண்ட குற்றம் யாதோ?" என்றனர் சிவபெருமான்.

"நல்லார் குழற்கு நாற்றம் செயற்கையாலன்றி இயற்கையாலுண்டோ? ஆகவே, இல்லது கூறலால், இது குற்றம்," என்றார் புலவர் தலைவர். அது கேட்ட கடவுட்புலவர், "மண்ணுலகத்துப் பெண்களின் கூந்தலுக்கு இயற்கை மணம் இன்றெனினும், விண்ணுலகில் வாழும் அரம்பையர் கூந்தலுக்கேனும் இயற்கை மணம் உண்டன்றோ?" என்றார். "அதுவும் அற்றே," என்றார் நக்கீரனார். உடனே சோமசுந்தரப் பெருமான், "உம்மால் வணங்கப்பெறும் உமாதேவியின் கூந்தல் எத்தன்மையது?" என்றார். வினை வயத்தால் நக்கீரர், "அதுவும் அற்றே," என்றார்.

மதியிழந்து மனந்தடுமாறும் மக்களைத் தண்டித்து நல்வழிப்படுத்த வேண்டுவது பெற்றோர் கடமையன்றோ! அதை மனத்துட்கொண்ட இறை

வர், நக்கீரரை ‘ நான் ’ என்னும் பிணி நன்கு பற்றிக் கொண்டிருந்தமையால், அதனை அகற்ற எண்ணினர்; நக்கீரர்க்குத் தாம் இன்னர் என்பதைத் தெரிவித்தற் பொருட்டு நெற்றிக் கண்ணை



யும், சடாமுடியையுங் காட்டினர். ஆயினும், மாற்றுதற்கரிய மருட்சியுற்றிருந்த நக்கீரர், இறைவரை நோக்கி, “ நீர் நெற்றியில் மட்டுமன்றி, உடலெல்லாம் கண்கள் தோன்றக் காட்டினலும், யான் தோற்பேன் அல்லேன்! நீர் சாற்றிய செய்யுள் குற்றமுடையதே! நும் சடைகொண்டு என்னை வெருட்டல் வேண்டா!” என்று தருக்குடன் கூறினர்.

அது கேட்ட இறைவர், “கற்றும் அறிவில்லாக் கயவனே, மூவுலகமும் போற்றும் உமாதேவியின்

கூந்தலைப் பழித்த நீ குட்டநோய் கொண்டு அலை வாயாக!'' என்று சினந்து கூறினர். அப்போது தான் நக்கீரரைப் பற்றியிருந்த 'நான்' என்னும் பிணி விலகிற்று. உடனே அவர் இறைவர் தாள்களில் விழுந்து, "எந்தையீர்! கருணையங்கடலே! அறிவின்றி இழைத்த தவற்றை மறந்து, அடியேனை மன்னித்து, தேவரீரது சாபப்பிணி கெடுமாறு அருள்புரிய வேண்டும்,'' என்று வணங்கினர். பக்தி வலையிற்படுகின்ற பரம்பொருளான சோம சுந்தரக் கடவுள், நக்கீரரின் வேண்டுகோளுக்கு மனமிரங்கி, "நக்கீர! நீ சென்று கயிலையைக் காணின், இக்கொடுநோய் நீங்கும்,'' என்றருளி மறைந்தார்.

## பயிற்சி

**1. விடை எழுதுக:**

(அ) நக்கீரர் யார்? அவர் காலத்துப் பாண்டிய மன்னர் யார்?

(ஆ) பாண்டிய மன்னர் மனத்தில் எழுந்த ஐயம் யாது?

(இ) அதனைப் போக்கிக் கொள்ள அவர் செய்தது யாது?

(ஈ) தருமி என்பவர் யார்? அவர் பொற்கிழியைப் பெற என்ன செய்தார்? பொற்கிழியைப் பெருமல் திரும்பியதேன்?

(உ) நக்கீரர் இறைவர் பாட்டிற் கண்ட குற்றம் யாது?

(ஊ) நக்கீரரை 'நான்' என்னும் பிணி பற்றியிருந்ததென்பது எவ்வாறு அறியப்படுகிறது? அது எப்போது அகன்றது?

**2. வாக்கியங்களில் அமைக்க:**

நிறுவி, தலைமைதாங்கி, உரையாடிக் கொண்டு, உவகை, மனமிரங்கி, அணுகினர்.

**3. எதிர்ப்பதங்கள் எழுதுக:**

நறுமணம், இயற்கை, அகன்று, மண்ணுலகம்.

**4. பொருள் எழுதுக:**

நிறுவி, தொண்டாற்றி, ஐயந்திரிபற, வல்லுநர், நிலாமுற்றம், கிழி, யாத்து, வறிது, உவகையுற்று, மட்டிலா, அண்ணலார், நல்லார், விண்ணுலகு, அரம்பையர், அற்றே, மருட்சி.



## 16. பாரதியார்

உலகில் கவிஞர்களைப் போற்றாத நாடு இல்லை. கவிஞர் தம் கவி வன்மையால் மக்கள் மனத்தைக் கொள்ளைகொள்கின்றனர். கவிஞர்கள் மறைந்திடினும், அவர்கள் இயற்றிய நூல்களைப் படிக்கும் பொழுதெல்லாம் அவர்கள் நம் கண்முன் நின்று உரையாடுவதுபோல நாம் உணர்ச்சி கொள்கிறோம். அவர்களால் நாட்டிற்கு அழியாப்புகழ் உண்டாகின்றது. உண்மைக் கவிஞர்களின் கவிகள் அக்காலத்திற்கும், இக்காலத்திற்கும், வரும் காலத்திற்கும் பொருந்துவனவாயுள்ளன. 'புலவர்

பாடாத புகழ் புகழன்று,' என்று பண்டைத் தமிழ் மன்னர் கருதினர். அறிவு நிரம்ப வேண்டுமாயின், கவிஞர்களிடத்தன்றோ உலகம் செல்ல வேண்டும்? ஒரு நாட்டு மக்களின் பெருமைகளை அந்நாட்டுக் கவிஞர்களின் வாக்கினால் பிற நாட்டார் அறிந்து மதிக்கின்றனர்.

நாட்டின் வாழ்விற்குக் கவிஞர்கள் இன்றியமை யாதவர்கள். அவர்கள், அரசர்களையும், வள்ளல் களையும், வீரர்களையும், அறிஞர்களையும் தங்கள் கவிதைகளிற் பாராட்டிப் பின் சந்ததியார் மறவா திருக்கும்படி செய்கின்றார்கள். தமிழகத்தில் காலத்திற்கேற்பப் பற்பல கவிஞர் தோன்றி யுள்ளனர். அவர்கள் தங்கள் தங்கள் காலத்திற்குப் பொருந்த நூல்களை இயற்றினார்கள். அத்தகை யாருள் சுப்பிரமணிய பாரதியாரும் ஒருவர். ஆனால், மற்றக் கவிஞர்க்கும் பாரதியாருக்கும் வித்தியாசமுண்டு; பாரதியார் **புதுமைக்கவி; புரட்சிக்கவி; தேசீயக்கவி.**

பாரதியார் தோன்றிய காலத்தை நாம் உணர்ந் தால்தான் பாரதியாரின் பெருமையை உணர முடியும். தமிழ் நாட்டில் ஆங்கிலக் கல்வி பரவியது. ஆங்கிலம் கற்றாரே உத்தியோகமும், பதவியும், சிறப்பும் பெற்றனர். அதனால், யாவரும் ஆங்கிலம் கற்பதில் ஊக்கங் காட்டினர். தமிழர் தமிழை அறவே மறந்தனர். ஆங்கிலேயர் ஆட்சியில் இந்தியா முழுவதும் அடிமையுற்றுக் கிடந்தது. தமிழர் நாட்டுப்பற்றும் மொழிப்பற்றுமின்றி, ஆங்கிலேயருக்கு அடிமைகளாய் வீரம் குன்றி யிருந்தனர். எங்கேனும் ஒரு சிலர் தமிழ்மொழி யைப் பழைய முறையிற் கற்றுப் பேணி வந்தன

ராயினும், அன்னூர் தமிழ் மக்களின் நெஞ்சத்தில் நாட்டுப் பற்றையும் மொழிப்பற்றையும் ஊட்டும் வகையறியாதவராயிருந்தனர். ஆதலின், தமிழ் மொழிப் பயிற்சியுங் குன்றியிருந்தது. இந்நிலையில் நாட்டுப் பற்றையும் மொழிப்பற்றையும் தமிழர் நெஞ்சத்தில் ஊட்டப் பாரதியார் தோன்றினூர்.

பாண்டி நாட்டிலுள்ள திருநெல்வேலிப் பகுதியில் உள்ளது எட்டையபுரம் என்னும், சமஸ்தானம். இச் சமஸ்தானத்தில் சின்னச்சாமி ஐயர் என்பார் ஒருவர் இருந்தார். அவர் தர்க்கம், கணிதம், இலக்கியம், இலக்கணம் என்பவற்றிற் சிறந்த பயிற்சியுடையவர்; ஆங்கிலமும் வட மொழியுமுணர்ந்தவர்; கூரிய மதியினர். அவர் சமஸ்தானத்தில் வேலை பார்த்து வந்தார். அவர் மனைவியார் இலக்குமி அம்மையார். ஐயர் அனைவ ராலும் விரும்பப்பட்டு, யாவரும் மதிக்க வாழ்ந்தார். அவர் செய்த புண்ணியத்தின் பயனாய் 1882-ஆம் ஆண்டு சுப்பிரமணிய பாரதியார் பிறந்தார். சின்னச்சாமி ஐயர், மைந்தரை மிக்க மகிழ்ச்சியோடு வளர்த்து வந்தார். குழந்தைக்கு ஐந்து வயது நடக்கும் பொழுது இலக்குமி அம்மையார் காலமானூர். சின்னச்சாமி ஐயரே தந்தையாரும் தாயாருமாய் இருந்து தனயரை வளர்த்து வந்தார்.

சுப்பிரமணிய பாரதியாரது செல்லப் பெயர் **சுப்பையா** என்பது. அமர் கல்வி கற்றற்குரிய பருவத்தில் பள்ளிக்கு அனுப்பப்பட்டார். பள்ளியில் அவர் மாணவர் பலரோடும் கலந்து பழகுவதில்லை. வீட்டில் சின்னச்சாமி ஐயர் தமிழ் நூல்களைக் கற்றுக் கொடுத்தார். பாரதியார் தந்தையாரோடு அரண்மனைக்குச் செல்வார்; அங்கு வரும் புலவர்

பெருமக்கள் பேசுவதை நுணுகிக் கேட்பார்; புலவர்கள் அவருடைய கூரிய மதியைக் கண்டு வியந்தார்கள். இளம்பருவத்திலேயே அவர் நா, கவிதைமாரி பொழியத் தொடங்கியது. அவர் சிற்சில பாடல்களைப் பாடி எடுத்துச்சென்று ஜமீன்தாருக்குக் காட்டுவார். ஜமீன்தார் அவற்றைக் கேட்டு மகிழ்வார்; 'பாரதியால் எட்டையபுரம் பின்பொருகால் பெருமை எய்தும்!' என்பார். பாரதியார் பதின்மூன்றுவது வயதிலேயே கவிதைகள் பாடத் தொடங்கினர். அத்திறனைக் கண்ட புலவர்கள், அவருக்குப் 'பாரதி' என்ற பட்டம் சூட்டினர்கள். பாரதி என்னும் சொல் கலைமகளைக் குறிக்கும். அப்புலவர்கள் சூட்டிய பாரதிப் பட்டமே பாரதியாருக்கு நிலைத்துவிட்டது.

பாரதியார் திருநெல்வேலி இந்துக் கல்லூரியிற்சேர்ந்து மூன்றுண்டுகள் படித்தார். இவருக்குப் பதினைந்தாவது வயது நடக்கும்பொழுது செல்லம்மாள் என்னும் நங்கையாரை மணம் பேசித் திருமணம் செய்து, கண்டு மகிழ்ந்தார் சின்னச்சாமி ஐயர். ஆனல், ஓராண்டிற்குள் சின்னச்சாமி ஐயரும் இவ்வுலக வாழ்வை நீத்தார். பின்னர்ப் பாரதியார் காசியில் வசித்து வந்த தம் அத்தையாரிடம் சென்றுர். அங்கு இந்து சர்வ கலாசாலையிற் சேர்ந்து, ஹிந்தி, சமஸ்கிருதம், ஆங்கிலம் என்னும் மொழிகளைப் பயின்றுர். எனினும், தமிழ்மொழியை அவர் மறக்கவில்லை.

காசிக்குச் சென்ற எட்டையபுர ஜமீன்தார் அவரை அழைத்து வந்து, தம் அரண்மனையில் வைத்துக்கொண்டார். எட்டையபுர சமஸ்தானப் புலவராகப் பாரதியார் 1904-ஆம் ஆண்டு அமர்ந்

தார். அக்காலத்தில் அவர் கவிதைகள் இயற்றி ஜமீந்தாரை மகிழ்வித்தார்; சுதந்தரமாக வாழ விரும்பிய பாரதியாருக்கு ஜமீந்தாரிடம் கட்டுப் பட்டிருக்க மனம் ஒருப்படவில்லை. அதனால், அவர் ஜமீனிலிருந்த வேலையை விடுத்து, மதுரைக்கு வந்தார்; மதுரையிற் **சேதுபதி கலாசாலையில்** தமிழாசிரியராய்ச் சிறிது காலம் இருந்தார். அப் பணியும் பாரதியார் மனத்திற்கு ஒவ்வாதொழிய, அதனையும் விடுத்துச் சென்னைக்கு வந்து சேர்ந்தார்.

அவர் சென்னையில் **சுதேசமித்திரன்** பத்திரி கையில் உதவி ஆசிரியராய் இருந்தார்; **பால பாரதம், இந்தியா** என்ற பத்திரிகைகளையும் நடத்தினர்; அப்பத்திரிகைகளில் நாட்டுப்பற்றை யும் மொழிப்பற்றையும் ஊட்டும் கவிதைகளையும் கட்டுரைகளையும் எழுதினர். அக்காலத்தில் நாட்டிற் சுதந்தரப் போராட்டம் வலிமை பெற்றது. சுதந்தர தாகம் மிகுந்த பாரதியார், அப்போராட்டத்தில் இறங்கினர்; அரசாங்கத்தை எதிர்த்துப் பல கட்டுரைகளையும், கவிதைகளையும் எழுதினர். அர சாங்கம் அடக்குமுறையைக் கையாண்டது; பத்திரிகைகளைப் பறிமுதல் செய்தது; ஆசிரியர் களைச் சிறைப்படுத்தியது. வீணிற் சிறையில் அடைபட்டுத் தேசப்பணி புரியாதிருக்கப் பாரதி யார் விழையவில்லை; ஆதலால், **புதுவைக்குச்** சென்றார். புதுச்சேரி பிரெஞ்சுக்காரர்க்குரியது. அங்கு அரசியல் வாதிகளைக் கைது செய்தல் ஆங்கில அரசாங்கத்தாருக்கு இயலாது.

புதுச்சேரிக்குச் சென்ற பாரதியாருக்கு ஏற் பட்ட இன்னல்கள் பலப்பல; வறுமை ஒருபுறம்

அவரை வாட்டியது. சுடச்சுட ஒளிரும் பொன்னே போல, பாரதியார் பற்பல இன்னல்களுக்கிடையில் ஊக்கங் குன்ருது, உள்ளக் கிளர்ச்சியுடன் கவிதைகள் பாடும் இயல்புடையவராய் விளங்கினுர். அவர் கவிதைகளிற் பெரும்பாலான புதுச்சேரியில் உருவாயின. பாரதியாருக்குப் புதுச்சேரியில் யோகி அரவிந்தர், சுப்பிரமணிய சிவா, வ. வே. சுப்பிரமணிய ஐயர் முதலான சான்ருேர்களின் நட்புக் கிடைத்தது. சில ஆண்டுகள் கடந்தன. பின்னர், பாரதியார் புதுச்சேரியை விடுத்துக் கடையத்திற்குச் சென்ருர்.

பாரதியார் சாதி சமயக் கட்டுப்பாடுகளைக் கடந்தவர்; 'மக்களனைவரும் ஒரு குலம்,' என்று கருதும் இயல்பினர். மக்களுள் உயர்வு தாழ்வு என்பதை அவர் கருதியதில்லை. அவர் யாவரையும் சரி சமமாகப் பார்க்கும் பொதுநோக்குடையவர். அவரது போக்கு, கடைய மக்களுக்கு வெறுப்பைத் தந்தது. அதனுல் அவருக்கு நேர்ந்த இன்னல்கள் பலப்பல. பாரதியார் எதற்கும் அஞ்சினவரல்லர். அவருக்கு இரு புதல்வியர் இருந்தனர். அவர் மீண்டும் குடும்பத்தோடு சென்னைக்கு வந்தார்; சுதேசமித்திரன் பத்திரிகையில் மீண்டும் துணையாசிரியராய் அமர்ந்தார்; கட்டுரைகளும் கவிதைகளும் எழுதி வந்தார்.

பாரதியார் வறுமையிற் செம்மை வாய்ந்தவர்; 'ஏற்பது இகழ்ச்சி,' என்னும் கொள்கையுடையவர்; வீரத்திற் குன்ருதவர்; தேசப்பற்றும் மொழிப் பற்றும் மிக்கவர். சமத்துவம், சகோதரத்துவம், சுதந்தரம் என்பன அவர் உள்ளத்தில் நிறைந்திருந்தன. அவர் மொழிப்பற்றும் நாட்டுப்பற்று

மின்றி உறங்கிக் கிடந்த தமிழ்நாட்டு மக்களைத் தம் கவிதைகளாலும், கட்டுரைகளாலும் தட்டி யெழுப்பிப் புத்துயிர் அளித்தார்; ஊக்கம் கொள்ளு மாறு செய்தார்; தமிழ்மொழிக்குப் புது நெறியிற் கவிதைகள் சமைத்தார். அவர் கவிதைகளில் அன்பும், வீரமும், நாட்டுப் பற்றும் விளங்கும். எளிய நடையில் இனிய முறையில் புதுநெறி பற்றி எழுந்த அவர் கவிதைகள், கேட்பார் உள்ளத்தைக் கொள்ளை கொள்வனவாகும். காலப் போக்கிற்கு ஏற்பக் கவிதைகளை இயற்றித் தந்தவர் பாரதியார். தமிழின் மறுமலர்ச்சிக்குப் பாரதியார் தந்தையா ராவார். பாரதியாரிடம் அன்பும், அருளும், இரக்க மும், ஈகையுங் குடிகொண்டிருந்தன.

பாரதியார் சென்னை திருவல்லிக்கேணியில் வசித்த காலத்தில் பார்த்தசாரதிசுவாமி கோயி லுக்குச் செல்வார்; அங்கு இருந்த யானைக்குத் தேங்காய் பழம் கொடுத்துப் பழகுவார். ஒரு நாள் யானை மதம் கொண்டிருந்தது. அதனைப் பாரதி யார் அறியார்; வழக்கம் போலத் தேங்காய்ப் பழங் களைக் கொடுக்கச் சென்றார். யானை அவரைத் தூக்கியெறிந்தது. அது முதல் அவர் நோய் வாய்ப் பட்டார். எவ்வளவு சிகிச்சைகள் செய்தும் பய னின்றிக் கழிந்தன. பாரதியார் 1921-ஆம் ஆண்டு, செப்டம்பர்த் திங்கள், 11-ஆம் நாள் பூத உடலை நீத்துப் புகழ் உடல் பெற்றார்.

பாரதியார் தேசீயக் கீதங்களைப் பாடியுள்ளார்; **கண்ணன் பாட்டு, குயிற்பாட்டு, பாஞ்சாலி சபதம், புதிய ஆத்திச்சூடி, நான்மணி மாலை** முதலான அரிய கவிதைகளை இயற்றியுள்ளார்; அநேக உரைநடை நூல்களையும் இயற்றினார்.

அவர் வாழ்ந்த காலத்தில் வறுமையினால் மிகவும் வருந்தினார். தமிழ் மக்கள் அவருடைய அருமை பெருமைகளைப் பின்னரே உணர்ந்தார்கள்; அவரது நினைவுக்குறியாக எட்டையபுரத்தில் 'பாரதி மண்டபம்' கட்டினார்கள். ஆண்டுதோறும் பாரதி விழா தமிழ் நாடெங்கும் கொண்டாடப்படுகிறது.

## பயிற்சி

**1. விடை எழுதுக:**

(அ) கவிஞர் இயல்பும் சிறப்பும் யாவை?

(ஆ) கவிஞர் 'நாட்டிற்குக் கண் போன்றவர்' என்பது எப்படி?

(இ) பாரதியார் காலத்தில் தமிழகத்தின் நிலை யாது?

(ஈ) பாரதியாரின் இளமைப் பருவம் எப்படிக் கழிந்தது?

(உ) பாரதியார் என்னென்ன தொழில்களில் ஈடுபட்டிருந்தார்?

(ஊ) பாரதியார் இயற்றிய நூல்கள் எவை? அவர் தமிழுக்கும், தமிழருக்கும் செய்த தொண்டுகள் யாவை?

(எ) பாரதியாரின் குணங்கள் யாவை?

**2. வாக்கியங்களில் அமைக்க:**

நாட்டுப்பற்று, மொழிப்பற்று, 'சுடச்சுட ஒளிரும் பொன்னே போல', வறுமையிற் செம்மை, ஏற்பது இகழ்ச்சி, ஏற்றத்தாழ்வு, காலப்போக்கு.

**3. பொருள் எழுதுக:**

உணர்ச்சி, வாக்கு, இன்னல். தனயர், கிளர்ச்சி, மறுமலர்ச்சி, ஒருப்படல், பதவி, ஊக்கம்.

**4. கட்டுரை வரைக:**

'பாரதியும் கவிதையும்' என்னும் பொருள் பற்றி ஒரு கட்டுரை வரைக.

## 17. கடிதம்

யோக ஹாமா,
1893ஆம் ஜூலை 10உ.

பிரியமுள்ள........,

நான் எங்கெங்கே செல்லுகிறேன் என்பதைத் தங்களுக்கு அடிக்கடி தெரிவியாததற்கு மன்னிக்கவும். எவனும் சாதாரணமாகவே சுறுசுறுப்பாயிருக்கிறான். அதிலும் முக்கியமாகச் சாமான்களைக் கவனமாய் வைத்துக்கொள்ளும் வாழ்க்கைக்குப் புதியவனான எனக்கு அதிக வேலை இருக்கிறது. அதைப்பற்றிக் கவலைப்படுவதே எனக்குப் பெருந் தொந்தரவாய் இருக்கிறது.



நாங்கள் கொழும்புத் துறைமுகம் போய்ச் சேர்ந்தோம். நாங்கள் ஏறிச் சென்ற கப்பல் அங்கு ஒரு நாள் தங்கிற்று. ஊரைப் போய்ப் பார்ப்பதற்கு வாய்த்த சமயத்தை நாங்கள் வீணாக்கவில்லை. வீதிகள் வழியே சவாரி செய்தோம். சாய்ந்தபடியே நிர்வாண நிலையிலிருந்த ஸ்ரீபுத்தரின் திருமூர்த்தியுள்ள ஓர் ஆலயந்தான் நான் பார்த்தவற்றுள் என் மனத்தில் நன்றாய்ப் பதிந்திருக்கிறது.

பிறகு மலேயத் தீபகற்பத்தில் கடலோரத்திலுள்ள பினாங்கில் நாங்கள் தங்கினோம். மலேயா ஜனங்கள் அனைவரும் முகம்மதியர்கள். அவர்கள்

முற்காலத்தில் பெயர்பெற்ற கடற்கொள்ளைக்காரர்களாயும், கடலின் மூலமாய்ச் செல்லும் வியாபாரிகள் கண்டு பயப்படும்படியானவர்களாயும் இருந்தார்கள். ஆனால், பல அடுக்குகளுள்ள தற்காலத்திய யுத்தக்கப்பலின் பீரங்கிகள் மேற்கூறிய மலேயா மக்களைச் சாத்வீகத் தொழிலைக் கைப்பற்றச் செய்தன. பினாங்கு, சிங்கப்பூர் போகும்பொழுது சுமத்திராத் தீவு கொஞ்சம் புலப்பட்டது. போகும் வழியில், முற்காலங்களில் கடற்கொள்ளைக்காரர்கள் பிரியமுடன் தங்கிய பல இடங்களைக் கப்பற்றலைவன் எனக்குக் காட்டினான். ஜலசந்திக் குடியேற்ற நாடுகளு[1]க்குச் சிங்கப்பூர் தலைநகரம். பலவிதப் பனைமரங்களுள்ள தாவரக் காட்சிச்சாலை ஒன்று இங்கிருக்கிறது. விசிறி வாழை இங்குச் செழுமையாய் வளர்கின்றது. பலாமரம் எங்கும் இருக்கின்றது. சென்னையில் மாமரங்கள் இருப்பது போலவே இங்குப் பெயர் பெற்ற மங்குஸ்தான் என்னும் மரம் அபரிமிதமாகக் காணப்படுகின்றது. ஆனாலும், மாமரத்திற்கு ஈடாக ஒன்றும் இல்லை. இப்பிரதேசம் பூமத்தியரேகைக்கு அருகே இருந்தபோதிலும், மக்கள், சென்னையிலுள்ளவரைப் போல அவ்வளவு கறுப்பல்ல. சிங்கப்பூரில் நல்ல காட்சிச்சாலையுமிருக்கிறது.

அடுத்தது ஹாங்காங்கு. இங்குச் சீனர்கள் அதிகமாகக் காணப்படுவதாலேயே நாம் சீனதேசம் வந்து சேர்ந்தோம் என்பது தெரியவரும். எல்லாத் தொழில்களும், வியாபாரமும் இவர்களிடையே இருக்கின்றன. ஹாங்காங்கே ஒரு சிறு சீன தேசமென்னலாம். கப்பல்கள் நங்கூரம்

1. Strait Settlemente.

பாய்ச்சிய உடனே நூற்றுக்கணக்கான சீனப்படகு கள் மக்களைக் கரையிற் சேர்க்கச் சூழ்கின்றன.

இரண்டு சுக்கான்களுள்ள இப்படகுகள் விசித் திரமானவை. படகின் சொந்தக்காரன் அதிலேயே வசிக்கிருன். அவன் மனைவி அனேகமாய்ச் சுக் கான்களிடம் நின்றுகொண்டு, ஒன்றைக் கைக ளாலும், மற்றொன்றைக் கால்களாலும் திருப்பு கின்ருள். அநேகமாய் அவளுடைய குழந்தை கால்களையும் கைகளையும் வெளியே தொங்கவிட்ட நிலையில் அவள் முதுகில் ஒரு துணியிற் கட்டப்பட் டிருக்கும். குழந்தை வெகு சாந்தமாய்த் தூங்கும் போது அவள் முழுப் பலத்தோடு படகைத் திருப்பு வதையும், மூட்டைகளைத் தள்ளுவதையும், அல் லது வெகு சாமர்த்தியமாய்ப் படகுக்குப் படகு தாண்டுவதையும் பார்த்தால், அதை ஓர் அதிசய மான காட்சி என்றே சொல்லவேண்டும். இதனோடு சாதாரணப் படகுகளும், நீராவிப் படகுகளும் வெகு வேகமாக வருவதும் போவதுமா யிருக் கின்றன. இந்த நெருக்கடியில் பின்னப்பட்ட கூந்தலுடைய சீனக் குழந்தையின் சிறு தலை பொடியாய்விடுமோ என நாம் பயந்தாலும், அந்தக் குழந்தை கொஞ்சமேனும் லக்ஷியம் செய்வதில்லை. இவ்வித வாழ்வு அதற்குச் சந்தோஷமானதாகத் தோன்றுகிறது போலும்! பித்துப் பிடித்தவர்போல அங்குமிங்கும் அலைந்து வேலைசெய்கிற அக் குழந்தையின் தாயார் சிறிது நேரத்திற்கு ஒருதரம் கொடுக்கும் இட்டிலி என்னவென்று அறிவதிலேயே அக் குழந்தை திருப்தி அடைகின்றது. சீனக் குழந்தை ஒரு பெரிய ஞானி. நம் இந்தியச் சிறுவன் தவழுவதற்கு முன் சீனச் சிறுவன் சாவ

தானமாய் வேலே செய்ய ஆரம்பிக்கின்ருன். தன் நிலேமைக்கேற்ற தத்துவ விசாரம் அவனுக்கிருக்கிறது. சீனர்களும் இந்தியர்களும், உயிரற்ற நாகரிகத்தில் அமிழ்ந்து கிடத்தற்குக் காரணம், ஏழ்மைநிலேயே என்று சொல்லலாம். அன்றைக்கு வேண்டியவற்றைத் தேடுவதே ஓர் இந்தியனுக்கும் சீனனுக்கும் இயலாத நிலேயிலிருப்பதால், வேருென்றைப் பற்றியும் நினேக்க முடிவதில்லே.

ஹாங்காங்கு ஓர் அழகிய பட்டினம். அடிவாரத்தைவிடக் குளிர்ச்சியான ஒரு மலேயின் உச்சியிலும், அதன் சாரல்களிலும் நகரம் கட்டப்பட்டிருக்கிறது. இரும்புச் சங்கிலிகளினுலும் நீராவியினுலும் இழுக்கப்படும் ஒரு டிராம் வண்டி செங்குத்தாய் மலேயின் சிகரத்துக்குச் செல்கின்றது.

நாங்கள் மூன்று நாள் ஹாங்காங்கில் தங்கிய பிறகு நதி வழியாய் எண்பது மைல் மேலேயுள்ள காண்டன் நகரத்தைப் பார்க்கப் போனேம். என்ன சந்தடி! என்ன மக்களின் கூட்டம்! ஆற்றின் நீரை மறைக்கும்படியான கணக்கற்ற படகுகள்! வாணிபம் செய்யும் படகுகள் நீங்கலாக, குடியிருக்கும் இடங்களாக உபயோகப்படும் படகுகள் நூற்றுக்கணக்கானவை. அவைகளில் பல பெரியனவாயும் நன்ருயுமிருக்கின்றன. சில, இரண்டு மூன்று மாடிகள் உயரமும், சுற்றிலும் தாழ்வாரங்களும் நடுவில் வீதிகளும் கொண்டு, மிதந்தபடியே இருக்கின்றன.

அயல் நாட்டினர் வசிப்பதற்காகச் சீன அரசாங்கத்தார் பிரித்துக் கொடுத்திருக்கும் இடத்தில் நாங்கள் தங்கினேம். ஆற்றின் இருகரைகளிலும் மைல் கணக்கில் நீண்டிருக்கும் இந்நகரம் சன

நெருக்கம் மிகுந்தது. நான் பார்த்த நகரங்களில் அந்நகரம் மிகவும் அசுத்தமானது. ஒவ்வொரு சீன னும் குளிப்பதில்லை யென்று உறுதி செய்திருப்பது போலத் தோன்றும்! ஒவ்வொரு வீடும் ஒரு கடை; கடையின் சொந்தக்காரர்கள் மாடியில் வசிக்கிறார்கள். தெருக்களோ, வெகு நெருக்கம்; வழியே போகும் ஒருவன் கடைகளைத் தொடும்படி யாக அவ்வளவு நெருக்கமாயிருக்கின்றன. பத் தடிக்கு ஒரு கசாப்புக் கடை. சிற்சில இடங்களில் பூனை, நாய் இவைகளின் மாமிசத்தை விற்கும் கடைகள் காணப்படுகின்றன. ஆனால், மிக ஏழை களான சீனர்களே நாய், பூனை இவைகளுடைய மாமிசத்தைப் புசிக்கிறார்கள்.

சீனதேசத்துப் பெண்ணை நாம் எப்பொழுதும் பார்க்க முடியாது. வட இந்தியாவிலுள்ள இந்துப் பெண்களைப் போல இங்கும் பெண்கள் எச்சரிக்கை யாக அந்தப்புரங்களில் வைக்கப்பட்டிருக்கிறார்கள். கூலிவேலை செய்து பிழைக்கும் பெண்களைத்தான் வெளியிற் பார்க்கலாம். இந்தப் பெண்களிற்கூட நம் தேசத்துச் சின்னஞ் சிறு குழந்தையின் பாதங் களைவிடச் சிறிய பாதங்களை உடைய சிலரை இங்குக் காணலாம். இவர்கள் குதித்துக் குதித்துப் போகிறார்களே யொழிய, நடக்கிறார்களென்று சொல்ல முடியாது.

பல சீன ஆலயங்களைப் பார்த்தேன். இத் தேசத்தில் முதன் முதலில் புத்தமதத்தைத் தழு வின அரசர், அவருடைய ஐந்நூறு சிஷ்யர்கள் ஆகிய இவர்கள் ஞாபகார்த்தமாகக் கட்டப்பட்டி ருக்கும் ஆலயமே எல்லாவற்றிலும் பெரியது. நடு வில் புத்தரது திவ்விய விக்கிரகமும், அதன் கீழ்ச்

சக்கரவர்த்தியின் உருவமும், பிறகு சிஷ்யர்களின் பிரதிமைகளும் இரு பக்கங்களிலும் மரத்திற் செதுக்கப்பட்டிருக்கின்றன.

காண்டனிலிருந்து ஹாங்காங்குக்கும், அங்கிருந்து ஜப்பானுக்கும் போனோம். முதலில் நாகஸாகித் துறைமுகத்தை அடைந்ததும் கீழிறங்கிச் சிறிது நேரத்திற் பட்டணத்திற்குள் சென்றோம். சீனாவுக்கும் ஜப்பானுக்கும் என்ன வேற்றுமை! அனேகமாய் வீதிகள் மிகவும் விசாலமாய், நேராய்ச் சீர்திருத்தப்பட்டிருக்கின்றன. சிறிய வீடுகள் துண்டுகளைப்போல இருக்கின்றன. இங்குள்ள ஒவ்வொரு நகரத்திற்கும் கிராமத்திற்கும் பின்னால் மரங்களடங்கிய சிறு குன்றுகள் இருக்கின்றன. விசித்திர உடைகள் தரித்த அழகிய ஜப்பானியர்களும், அவர்கள் வேலை செய்வதும், நடப்பதும், நிற்பதும் எல்லாம் அதிசயமாயிருக்கின்றன! ஜப்பான் ஒரு விசித்திர தேசமென்றே சொல்லலாம். சிறு செடிகளும் புற்றரைகளும், சிறு செயற்கை நீர்வீழ்ச்சிகளும், கற்பாலங்களும், ஜப்பானிய முறைப்படி ஏற்பட்ட தோட்டங்களும் ஒவ்வொரு வீட்டின் பின்புறத்திலுமிருக்கின்றன.

நாகஸாகியிலிருந்து கோபுக்குப் போனோம். ஜப்பானின் உட்பிரதேசத்தைப் பார்க்க விரும்பி, நான் கப்பலிலிருந்து இறங்கித் தரை வழியாக யோகஹாமாவிற்குப் போனேன். ஜப்பானின் நடுவில் பல தொழிற்சாலைகளுள்ள ஓஸாகா என்னும் பெரிய பட்டணத்தையும், முன் தலைநகராயிருந்த டோக்கியோ என்னும் பட்டணத்தையும் நான் கண்டேன். டோக்கியோ, கல்கத்தாவைவிட விஸ்தீரணத்திலும் ஜனத்தொகையிலும் இரு

மடங்கு பெரியது என்று சொல்லலாம். உத்தரவுச் சீட்டு[1] இன்றி அயல் நாட்டானொருவன் இங்கே உட்பிரயாணம் செய்ய விடப்படுவதில்லை.

இங்கு அநேக கோயில்களை நான் பார்த்தேன். —ஒவ்வொரு கோயிலிலும் பழைய வங்காள எழுத்துக்களில் வடமொழி மந்திரங்கள் எழுதப்பட்டிருக்கின்றன. சில அர்ச்சகர்களுக்கு வடமொழி தெரியும். மேன்மையும் தூய்மையும் பொருந்தியவைகளுக்கெல்லாம் இடமான தேசம் இந்தியா என்றே ஜப்பானியர் எண்ணியிருக்கின்றனர். அப்படி அவர்கள் எண்ணியிருக்கும் உங்கள் நிலைமை என்ன?

வாழ்நாள் முழுவதும் வம்பு பேசுகின்றீர்கள். வீண் வாயாடிகள் நீங்கள். உயிர்ப் பிணங்கள் நீங்களே. வெளிநாடுகளுக்கு வந்தால், உங்கள் வர்ணச்சிரமம் போய்விடுகிறது! வரவர அதிகரிக்கும் மூடநம்பிக்கை யென்னும் பாரத்தைப் பல்லாண்டுகளாகச் சுமந்து உட்கார்ந்தும், இன்னும் 'இந்த உணவைத் தொடுவதா? அந்த ஆகாரத்தைத் தொடுவதா?' என்பதைப்பற்றி வாதிப்பதில் உள்ள சக்தியையும் இழந்து விட்டீர்கள்; யுகயுகமாயுள்ள சாதி சமூகக் கொடுமையினால் மனிதப் பண்பையே இழந்து, நசுக்குண்டு இருக்கும் நீங்கள் என்ன மனிதர்களா? தற்காலம் நீங்கள் என்ன செய்துகொண்டிருக்கிறீர்கள்? புத்தகமும் கையுமாகக் கடற்கரையில் உலாவுவது; ஐரோப்பிய மூளை கண்டுபிடித்த சிறு விஷயங்களை ஜீரணம் செய்து கொள்ளாமலே மனப்பாடம் செய்வது; பிறகு ரூ. 30 சம்பளம் பெறும் குமாஸ்தாவாவது;

1. Pass port.

அதிகமானுல் இந்திய இளைஞனின் ஆசைகளுக் கெல்லாம் சிறந்த ஒரு வக்கீலாகவாவது ஆக வேண்டுமென்பதே அல்லவா? பசி பொருத, அன்னத்திற்காக அழும் குழந்தைகளைப் பெற்றுத் திண்டாடுபவர் நம் மாணுக்கர்தாமே! உங்களை யும், உங்கள் புத்தகங்களையும், நீண்ட சட்டை களையும் பல்கலைக்கழகச் சங்கத்தாரின் யோக் கியதா பத்திரங்களையும் மூழ்கடிப்பதற்குப் போது மான நீர் கடலிலில்லையா?

வாருங்கள்! மனிதராயிருங்கள்! மேற்செல்லு வதற்கு எப்பொழுதும் எதிராய் நிற்கும் வைதிகர் களை ஒழித்துத் தள்ளுங்கள். ஏனெனில், அவர்கள் எப்பொழுதும் நல்வழிக்கு வரமாட்டார்கள். அவர் கள் மனம் அவ்வளவு பரந்த நோக்கம் உடைய தன்று. குருட்டு நம்பிக்கையும், சுய ஆட்சியும் பரவி இருந்த பல நூற்றுண்டுகளின் பலனுக அவர்கள் இருக்கின்றுர்கள். வைதிகர்களை முதலில் வேரறுங்கள். வாருங்கள்! மனிதராயிருங்கள். உங்களுடைய சின்னஞ்சிறு பொந்துகளை விட்டு வெளிவந்து, வெளியிலுள்ளவர்களைப் பாருங்கள். உங்களுக்கு மனிதர்களிடம் அன்புண்டா? உங்கள் நாட்டின்மீது உங்களுக்கு அன்புண்டா? அப்படி யானுல், புறப்படுங்கள். இன்னும் மேலான ஒன்றிற்காக முயற்சி செய்வோம். உங்கள் உயிரொத்த நண்பர்களும், மிகவும் நெருங் கியவர்களும் அழுதபோதிலும், அவர்களைப் பார்க் கப் பின்திரும்பாமல் முன்செல்லுங்கள்.

ஆயிரம் இளைஞர்கள்—மனிதர்கள், உறுதி யான மனமுடையவர்கள்—மிருகங்களல்ல—இந்தி யாவிற்காகத் தங்களைத் தியாகம் செய்யவேண்டும்.

ஏழைகளிடம் பச்சாத்தாபம், அவர்கள் பசித்த வாய்க்கு அன்னம், பொதுமக்களுக்கு அறிவு, உங்கள் முன்னோர்களுடைய கொடுங்கோலாட்சியால் மிருக நிலையில் தள்ளப்பட்டவர்களை மனிதர்களாக்குதல்—இவைகளுக்காக உயிர் போம்வரைக்கும் முயற்சி செய்தல் ஆகிய இவைகளின்பொருட்டு உயிரிருப்பினும், போயினும் உழைக்க முன்வரும் தன்னலமற்ற மனிதர்கள் எத்தனை பேர்களை ஈடுபடுத்தச் சென்னை தயாராயிருக்கிறது ?

உங்கள்,

விவேகானந்தர்.

## பயிற்சி

**1. விடை எழுதுக :**

(அ) மலேய மக்கள் முற்காலத்தில் எவ்வாறு பிழைத்து வந்தார்கள் ?

(ஆ) விசிறி வாழையும், மங்குஸ்தானும் எங்கு விசேஷம் ?

(இ) ஹாங்காங்கில் படகு ஓட்டும் பெண்களைப் பற்றிக் குறிப்பெழுதுக.

(ஈ) காண்டன் நகரத்தை விவேகானந்தர் எவ்வாறு வருணிக்கிறார் ?

(உ) சென்னை மக்களுக்கு விவேகானந்தர் கூறுவன யாவை?

**2. பொருள் தருக :**

குடியேற்றம், தாவரக் காட்சிச்சாலை, ஈடாக, நங்கூரம், சுக்கான், சாந்தமாய், தத்துவ விசாரம், அந்தப்புரம்.

**3. வாக்கியங்களில் அமைக்க :**

மன்னிக்கவும், சாந்தமாய், செங்குத்தாய், ஜனசமூகம், பிரதிமைகள், சீர்திருத்தம், அதிசயம்.

# 18. முகம்மது நபி

முகம்மது நபி என்னும் மகான் அரேபியாவின் தலைநகராகிய மக்காவின்கண் கி. பி. 571-ஆம் ஆண்டு ஏப்ரல் திங்கள் 20-ம் நாள் திங்கட்கிழமை வைகறைப் பொழுதில் அத்தேயத்தின்கண் சிறப்புப் பெற்ற 'குறைஷிய' குலத்திலே அப்துல்லாவுக்கும் அவரது மனைவியார் ஆமினுவுக்கும் பெறலருந்தவப் பிள்ளையாகப் பிறந்தார். இவர் பிறப்பதற்குச் சில மாதம் முன்னரே தந்தையார் காலஞ்சென்றார். முகம்மது அவர்கட்கு ஆறு வயதாகும் முன்னரே அன்னையார் ஆமினுவும் ஆண்டவனடி சேர்ந்தார்.

இவர் இளமை முதல் வாய்மையுடைமை, தீமைஇன்மை, யோக்கியப் பொறுப்பு, ஒழுக்கப் பெருமை, நம்பிக்கைக்குரிய தன்மை முதலாய நற்குணங்களிற் சிறந்து விளங்கினார். இதனால் 'அல் அமீன்' (சரியான நம்பிக்கைக்குரியவர்) என்னும் பட்டத்தை அத்தேய மக்கள் இவர்க்குச் சூட்டினர். நம்பிக்கை காரணமாக, மக்கா நகரின்கண்ணே நாற்பதாட்டைப் பிராயத்தாளும் விதவையுமான 'கதிஜா' என்னும் செல்வச் சீமாட்டி இவரைத் தம் வர்த்தகத் தலைவராகத் தேர்ந்தெடுத்தாள். அம் மாது சிரோமணியின் ஷாம்தேய வாணிபத்தில் நம்பிக்கையுடன் நடந்து நல்ல இலாபத்தையுங் காண்பித்தார் முகம்மது அவர்கள். இவரது யோக்கியப் பொறுப்பிலும், வர்த்தக வாய்மையிலும், களங்கமற்ற ஒழுக்கத்திலும் பெருமதிப்புக் கொண்ட 'கதிஜா' பிராட்டியார் பிறகு இவரையே திருமணம் செய்துகொண்டார். இத் திருமணத்தின் பின் முகம்மது அவர்கள் வாணிபத்தில் ஈடு

படாது, தனித்திருந்து வழிபாடியற்றுவதிலும், தான தருமம் செய்வதிலும், சமூகசேவை புரிவதிலும், துன்பப்பட்ட ஏழை எளியவர்களுக்கு உதவி செய்வதிலுமே காலம் கடத்தி வந்தார். இவ்வாறுகப் பதினைந்து ஆண்டுகள் கழிந்தன.

இப் பெரியார், முதல் மூன்றுண்டுகள் மட்டும் மறைவாகவே இஸ்லாமியப் பிரசாரம் செய்து வந்தார். எனினும் மக்காவிலுள்ள குறைஷிகள் இவ்விஷயத்தைத் தெரிந்துகொண்டு இஸ்லாத்திற் சேர்ந்து வந்தவர்களை எல்லாம் ஏளனஞ் செய்து துன்புறுத்தத் தொடங்கினுர்கள். மறைமுகமாக முகம்மதுநபி பிரசாரம் செய்து வந்ததினுலும், எதிரிகளின் இன்னல்களும் இடையூறுகளும், நாளுக்கு நாள் பெருகிக்கொண்டே வந்ததினுலும் முதல் மூன்றுண்டுகளில் ஏறக்குறைய 40 மனிதர்களே இஸ்லாத்திற் சேர்ந்தார்கள்.

நபிப் பட்டம் வந்த 10-ஆம் ஆண்டில் கதிஜா அம்மையார் காலகதியடைந்தார். இதனுல் நபி பெருமானுக்குப் பக்கபல மென்பது ஒரு சிறிது மக்காவின்கண் தளர்வுறக் கண்ட எதிரிகளும் அதிகம் துள்ளத்தொடங்கினர். எனவே, முகம்மது நபி தாயிரென்னும் மற்றொரு நகருக்குச் சென்றேனும் பிரசாரம் செய்யலாமென்று எண்ணிச் சென்றுர். ஆங்கிருந்தும் கயவர்களாற் கல்லெறிபட்டுக் காலில் இரத்தம் சொரியத் துரத்தப்பட்டார். பிறகும் மெக்காவுக்கே திரும்பிவந்து யாத்திரா காலங்களில் வெளியூர்களிலிருந்து ஆங்கு விஜயம் செய்யும் மனிதர்களை நோக்கி இஸ்லாத்தை உபதேசம் புரிந்து வந்தார். அவர்களுள் ஒரு சிலர் செவி தாழ்த்துவதும், மற்றும் பலர் உதாசீனம்

செய்வதுமாகவே சில காலங்கள் கடந்தன. ஒரு முறை மதீனுவிலிருந்து மக்காவுக்கு விஜயம் செய் திருந்த அறுவர் முகம்மது நபியின் உபதேசத் தைக் கேட்டு இஸ்லாத்திற் சேர்ந்துவிட்டனர். எனவே, அடுத்த ஆண்டில் அவ்வறுவரும் மற்று மோர் அறுவருடனே வந்து இஸ்லாத்திற் சேர்ந்து கொண்டனர். இது நபிப் பட்டம் வந்த 11-ஆம் ஆண்டில் நிகழ்ந்ததாகும்.

நபிப் பட்டம் வந்த 13-ஆம் வருட ஆரம்பத் திலே நபி பெருமானும் மதினுவுக்குப் புறப்படச் சித்தமாகிவிட்டார். இதற்கிடையில் எல்லா முஸ்லிம் களும் மதினுவுக்குத் தப்பி ஓடிவிட்டார்களென் பதை அறிந்து ஆத்திரங்கொண்ட குறைஷியர் முகம்மது நபியையும் அவ்வாறு விடக்கூடாதென்று தீர்மானித்தார்கள். அஃதன்றி ஒரு குறித்த இரவில் முகம்மது நபியைக் குத்திக் கொன்றுவிடுவ தென்றே ஏற்பாடும் செய்து முடித்தனர். இது தெரிந்து முகம்மது நபி நள்ளிரவிலே அவ்வீட்டை விட்டுப் புறப்பட்டு '**அபூபக்கர்**' என்னும் தம் முடைய தலைமை சீடரையும் அழைத்துக்கொண்டு தொளர் என்னுங் குகைக்குள்ளே மறைவாகத் தங்கினுர். நபிகள் நாயகம் மூன்றுநாள் வரை அக்குகையினுள்ளே தங்கியிருந்து நான்காவது நாள் புறப்பட்டுச் சீடரும் உடன்வர, இருவரு மாக மதீனுவிற்குச் சென்ருர்கள். இதுதான் நபி நாயகத்தின் சரித்திரத்தில் '**ஹிஜ்ரத்**' என்று பிரபலமாகச் சொல்லப்படுகிறது. இதிலிருந்து தான் முஸ்லிம்களின் ஹிஜ்ரி வருடம் கணிக்கப் பட்டு வருகிறது.

இவ்வாறு மக்காவை விட்டு வடக்கே 300 மைல்

களுக்கப்பாலுள்ள மதீனுவிற்குச் சென்று ஆங்கிருந்த யூதர்களையும், ஏனையோரையும் சீர்திருத்தி வந்தார். குறைஷிகள் மட்டும் தாம் முஸ்லிம்கள் மீது வைத்த வர்மத்தைச் சிறிதும் மறந்துவிடவில்லை. எனவே, இஸ்லாத்தை ஒழித்து விடுவான் வேண்டி 1000-க்கு மேற்பட்ட குறைஷிகள் மதீனுவின்மீது ஹிஜ்ரி 2-ல் படையெடுத்துச் சென்ருர்கள். ஸீரியாவுக்குச் சென்று திரும்பி வரும் மெக்கா நகரத்தவரின் வாணிபக் கூட்டத்தை மதீனுவிலுள்ள முஸ்லிம்கள் தாக்கப் போகிருர்கள் என்னும் ஒரு பொய் வதந்தியைக் காரணமாக வைத்துக் கொண்டே அம் முஸ்லிம்களைத் தாக்கச் சென்ருர்கள். நபி பெருமான் இச்செய்தி தெரிந்து தம் வயமிருந்த சிறுவர்களும், வயோதிகர்களும், போர்ப் பயிற்சி அற்றவர்களும் சேர்ந்த ஆயுதபாணிகளல்லாத 313 முஸ்லிம்களை அழைத்துக் கொண்டு மக்காவிலிருந்து வரும் குறைஷிப் படைகளை நடுவழியிலே தடுக்கச் சென்ருர். ஆகவே, பத்று என்னுமிடத்தில் இரு திறத்தார்க்குங் கடும் போர் நிகழலாயிற்று.

இப் போரில் முழுத் தோல்வியுற்றுப் புறங் காட்டி மக்காவிற்கு ஓடிய குறைஷிகள், தங்கள் இனத்தவர்களையும் சுற்றுப் புறங்களிலுள்ள மற்றெல்லா இனத்தவரையும் திரட்டிக்கொண்டு 3000 வீரர்கள் வரை மதீனுவிற்கருகே வந்து பாடிவீடு செய்துகொண்டார்கள். அப்போதும் முகம்மது நபி தம்முடைய 700 சீடர்களுடனே சென்று, மிக்க தீரத்துடனே உஹுதென்னும் மலையடிவாரத்தில் போர் புரிந்தார். இந்தப் போரில் முஸ்லிம்கள் வெற்றி பெற்ருர்களென்று கூறுவதற்

கில்லை. எனினும், குறைஷிகளும் வெற்றிமாலை சூடி முஸ்லிம்களைத் தொலைத்துவிட முடியவில்லை. ஆதலின், ஆங்கு முழு வெற்றிபெற முடியாது திரும்பிய குறைஷிகள் மக்காவிற்குச் சென்ற பின்னரும், தங்கள் பகைமை எண்ணத்தை விட்டார்களில்லை. ஆகவே, அவர்கள் அரபு நாடு முழுவதும் சுற்றுப் பிரயாணஞ் செய்து எல்லா அராபிக் கூட்டத்தினரையும் முஸ்லீம்களுக்கு விரோதமாய்க் கிளப்பிவிட்டார்கள்.

நபி பெருமான் தமக்குக் கிடைத்த 3000 வீரர்களுடனே சென்று மதீனாவைச் சூழ ஓர் அகழ் வெட்டிக் கொண்டு போருக்கு ஆயத்தமாய் நின்றார். இறைவன் சோதனையால் ஏற்பட்ட கடும் புயலாலும், மழையாலும், குளிராலும் எதிரிகள் தங்கள் ஆயுதங்களையும், பிற தட்டுமுட்டுச் சாமான்களையும் எறிந்து விட்டு மக்காவை நோக்கி ஓட்டம் பிடித்தார்கள். ஹிஜ்ரி 8-ல் நபிபெருமான், 10000 முஸ்லீம் வீரர்களுடனே புறப்பட்டுச் சென்று மக்கா நகரைக் கைப்பற்றிக் கொண்டார். குறைஷிகள் எதிர்த்து நிற்கவில்லை. எல்லோரும் தலை குனிந்து வாளாவிருந்தனர். ஆதலின், முகம்மது நபி இரத்தஞ் சிந்தாது அந்நகரைக் கைப்பற்றிக் கொண்டதோடு, அந்த ஜன்மப் பகைவர் அனைவரையும் அடியோடு மன்னித்தும் விட்டார். இதற்கிடையில் அரபு தேயத்தின் பற்பல பகுதிகளும் தாமாக இஸ்லாத்திற் சேர்ந்துகொண்டே வந்தன. ஒரு சில முரடர்கள் மட்டும் சிறிது எதிர்ப்பிற்குப் பின்னே இஸ்லாத்தைத் தழுவிக் கொண்டார்கள். ஹிஜ்ரி 9-ல் ஹஜ்ஜுக்குச் சென்ற முஸ்லிம்களால் நபி பெருமானின் அரசியல் அறிக்கை ஒன்று அந்

நகரின்கண் வாசிக்கப்பட்டது. பின்னர் ஹிஜ்ரி 9—10ல் அரபு தேயத்தின் பற்பல பகுதிகளிலிருந்தும் தூதுக் கூட்டங்கள் அடுக்கடுக்காக வந்து தீனுல் இஸ்லாத்திற் சேர்ந்து கொண்டே வந்தனர். பின்னர் ஹிஜ்ரி 10-ல் நபி பெருமான் 1,50,000 சீடர்களுடனே புறப்பட்டு மக்காவிற்குச் சென்று தம்முடைய இறுதி 'ஹஜ்ஜை' நிறைவேற்றிக் கொண்டார். அது சமயம் அருகிலுள்ள அரபாத்து மைதானத்தில் நின்று ஓர் இனிய இறுதிப் பிரசங்கமும் செய்துமுடித்தார். அதில் 'ஒரே கடவுட் கொள்கை, பெண்களின் உயர்வு, அடிமைகளின் மேன்மை, உறவினர் நட்பினரோடு நடந்து கொள்ள வேண்டிய முறைமை' என்பன பற்றி மிகுதியும் வற்புறுத்திக் கூறப்பட்டன. அஃதோடு 'கொலை, களவு, காமம், கள், சூது, அநாதைக் குழந்தைகளின் பொருளை அபகரித்தல் ஆகியவற்றால் விளையுங் கேடுகள்' பற்றியும் அழகாக இடித்துரைக்கப்பட்டன. இவ்வாறு இஸ்லாத்தைப் பரப்பிய தூதர் முகம்மது நபி தமது அறுபத்துமூன்றும் வயதில் ஹிஜ்ரி 11-ல் (கி. பி. 632-ல்) ஆண்டவன் திருவடி நீழலை எய்தினர்.

### பயிற்சி

1. விடை எழுதுக :

(அ) நபிகளின் தாய் தந்தையர் பெயரென்ன ?

(ஆ) நபி அவர்களுக்கு 'அல் அமீன்' என்னும் பட்டம் ஏன் வழங்கப்பட்டது ?

(இ) இவர் கதிஜா அம்மையாரை மணக்க வேண்டியதேன் ?

(ஈ) மணம் செய்துகொண்டபின் நபி அவர்கள் வாழ்க்கையில் ஏற்பட்ட மாறுதல்கள் யாவை ?

(உ) நபி அவர்கள் எப்படி இஸ்லாமியப் பிரசாரம் செய்தார் ?

(ஊ) குறைஷிகள் முகம்மது நபி அவர்களை எப்படிக் கொல்ல நினைத்தார்கள்? அதிலிருந்து நபி எப்படித் தப்பித்துக் கொண்டார்?

(எ) குறைஷியருக்கும் முகம்மது நபி அவர்களுக்கும் நடந்த போரைப் பற்றிச் சொல்லுக.

(ஏ) நபி அவர்கள் ஆற்றிய இறுதிப் பிரசங்கத்தில் கூறியதென்ன?

**2. எதிர்ச்சொற்கள் எழுதுக:**

இலாபம், வாய்மை, ஏளனம், தாழ்த்து, சிறிது.

**3. வாக்கியத்தில் அமைத்தெழுதுக:**

அல் அமீன், தலைவராய், காலம்கடத்தி வந்தார். இடையூறுகளும், இரத்தம் சொரிய, தொளளர் என்னும் ஹிஜ்ரி வருடம், புறங்காட்டி, வாசிக்கப்பட்டது.

**4. சொல்லியபடி செய்க:**

முழுத்தோல்வியுற்றுப் புறங்காட்டி மக்காவிற்கு ஓடிய குறைஷிகள் தங்கள் இனத்தவர்களையும், சுற்றுப்புறங்களிலுள்ள மற்றெல்லா வர்க்கத்தினரையும், திரட்டிக் கொண்டு 3000 வீரர்கள் வரை மதீனாவிற்கருகே வந்து பாடிவீடு செய்து கொண்டார்கள். (சிறுசிறு வாக்கியங்களாய் எழுதுக.)



# 19. நிதி நிலையங்கள்

'பொருளிலார்க்கு இன்பமில்லை,' என்பது நாம் அறிந்த உண்மை. ஆதலால், பொருள் ஈட்டும் முயற்சியை மேற்கொள்ளாதவர் எவருமிலர். அம் முயற்சியில் வெற்றி பெறுதவரும் இலர்; ஆனல், தாம் ஈட்டும் பொருள் குடும்பச் செலவுக்கே போதாமல் துன்புறுபவர் பலர். குடும்பத்துக்குப் போதுமான பொருள் ஈட்டுபவர் சிலர். தம் தேவைக்கு அதிகமாக ஈட்டுபவர் வெகு சிலரே. இவர்களே பொருளைச் சேமித்து வைக்கும் வாய்ப்புள்ளவர். தாம் சேமிக்கும் பொருளை வீட்டில் வைத்து, அதற்குக் காவல் புரிவது துன்பமேயன்றி, நன்மை பயவாது. 'புண்ணிய வசத்தினுல் செல்வமது வர வேண்டும்,' என்னும் முன்னேர் வாக்கிற்கிணங்கச் சிலர் முற்பிறப்பின் புண்ணியத்தால் தம் மூதாதையர் மூலம் ஏராளமான பொருளைப் பெறுவதும் உண்டு. அவர்கள் அப்பொருளை எங்கு வைத்துக் காப்பது? அன்றியும், அப்பொருள் வீட்டில் இருந்தால், அதனுல் வருமானமேதும் வாராதன்றே? வருமானத்தைக் கருதி வட்டிக்குப் பணம் கொடுத்தால், சில சமயங்களில் முதலுக்கே மோசம் ஏற்படுவதும் உண்டு. ஆதலால், பணக்காரர்கள் அதிக வட்டிக்கு ஆசைப்பட்டு மோசம் போகாமல், தங்கள் பணத்தைக் குறைந்த வட்டிக்கு வாய்மையும், நேர்மையும், பொறுப்பும், செல்வமும் படைத்த சிலரால் நிறுவப்பட்டிருக்கும் பாதுகாப்பான இடத்தில் வைப்பு வைக்கின்றுர்கள். இங்ஙனம் பல செல்வந்தர்கள் பாதுகாப்பைக் கருதிக் குறைந்த வட்டிக்குக் கொடுக்கும் பணத்தை,

அதனை ஏற்றுக்கொள்பவர், தேவைப்படுபவர்களுக்குத் தக்க பொறுப்பின்மீது கடனாகக் கொடுப்பர். இங்ஙனம் குறைந்த வட்டிக்குப் பணத்தைப் பெற்று, அதைவிடச் சிறிது அதிக வட்டிக்குப் பணத்தைக் கொடுக்கும் நிலையங்களே நிதி நிலையங்களாம். இவை ஆங்கிலத்தில் **பாங்குகள்** எனப்படும்.

இத்தகைய நிதி நிலையங்கள் எங்ஙனம் நடைபெறுகின்றன என்பதைப்பற்றிக் கவனிப்போம் : வாய்மையும், நேர்மையும், பொறுப்பும் வாய்ந்த செல்வந்தர் சிலர் தமது முதற்பணத்தோடு, பாதுகாப்புக்காகப் பணக்காரர்கள் வட்டிக்குத் தரும் பணத்தையும் சேர்த்து, மூலதனமாக வைத்து, நிதி நிலையங்களை நிறுவுகின்றார்கள் என்றோம். இவர்களே, அவற்றின் **நிர்வாகிகள்**[1] ஆவார்கள். ஆனால், இவர்கள் அனைவரும் இருந்து நிதி நிலையத்தை நடத்துவதில்லை. தங்களுள் மிக்க நேர்மை வாய்ந்த ஒருவரை, நிர்வாகப் பொறுப்பை ஏற்று, நிதி நிலையத்தை நடத்த ஏற்படுத்துவர். அவர் **நடைமுறை நிர்வாகி**[2] அல்லது **மானேஜிங் டைரெக்டர்** என்று வழங்கப்படுவர். அவருக்குக் கீழ்ப் பல அலுவலாளர் இருப்பர்.

நிதி நிலையங்களில் பல வகை உண்டு. **வாணிகத்துறை நிதி நிலையங்கள்**[3], **கூட்டுறவு நிதி நிலையங்கள்**[4], **நாணயமாற்று நிதி நிலையங்கள்**[5] என்பன அவற்றுள் சில. இவற்றுள் நம் நாட்டில் அதிகமாக உள்ளவை வாணிகத்துறை

---

1. Directors 2. Managing Director 3. Commercial Banks 4. Co-operative Banks 5. Exchange Banks

நிதி நிலேயங்களே. அவைகளேப்பற்றி மட்டும் படிப்போம்: அவை நம்மவர் நடத்தும் அயல் நாட்டு வாணிகத்துக்கு எவ்விதம் உதவி புரிகின்றன என்பதை ஓர் உதாரணத்தால் அறியலாம். ஒரு வணிகர் அயல் நாட்டிலிருந்து, ஒரு மோட்டார் ஏழாயிர ரூபாய் வீதம், பத்து மோட்டார் வருவிக்கிருர். அவற்றிற்கு முன்பணமாகத் தம்மிடமிருந்த இருபதாயிரத்தைச் செலுத்திவிடுகிருர்; எஞ்சிய ஐம்பதாயிரத்தைத் தாம் கணக்கு வைத்திருக்கும் நிதி நிலேயம் செலுத்துமென்று அறிவிக்கிருர். மோட்டார்கள் வந்து சேர்ந்த உடனே அவர், கணக்கு வைத்திருக்கும் நிதி நிலேயம் பணத்தைச் செலுத்திவிட்டு, மோட்டார்களே இறக்கிக்கொள்ளும். அவைகளே வருவித்தவர், நிதி நிலேயத்தோடு தாம் செய்துகொண்டுள்ள ஏற்பாட்டின்படி, ஒரு குறித்த காலத் தவணேக்குள் பணத்தைச் செலுத்திவிடுவார். இம்முறையிலே தான் நிதி நிலேயங்கள் அயல் நாட்டு வாணிகத்துக்கு உதவி புரிகின்றன. அன்றியும், வாணிகத்துறை நிதி நிலேயங்கள் வீடுகள், நிலங்கள், பொன்னணிகள் முதலிய தக்க பொறுப்புக்களின் மீது குறைந்த வட்டிக்குக் கடன் கொடுப்பதும் உண்டு.

இனி, நிதி நிலேயங்களிற் பொருள் வைக்கும் முறையைப் பற்றியும், வாங்கும் முறையைப் பற்றியும் கவனிப்போம்: பொதுவாகப் பொருள் வைப்பு[1] மூன்று வகைப்படும். அவை நிரந்தர வைப்பு[2], நடப்பு வைப்பு[3], சேம வைப்பு[4] என்

1. Deposit 2. Fixed Deposit 3. Current Deposit 4. Savings Deposit

பன. ஒருவர் தம் பொருளை ஒரு குறித்த கால அளவுக்குள் திருப்பி வாங்காமல் வைப்பது நிரந்தர வைப்பாகும். இந்தத் தொகைக்குச் சிறிது அதிக வட்டி கிடைக்கும். நடப்பு வைப்பு என்பது. ஒருவர் தம்மிடமுள்ள பணத்தை வைப்பாக்கித் தமக்கு வேண்டிய போதெல்லாம் அதினின்றும் பொருளைத் திருப்பிப் பெறல்[1], பொருள் கிடைத்த போதெல்லாம் மீண்டும் மீண்டும் வைப்பாக்கல் ஆகிய முறைகளை உடையது. சேம வைப்பென்பது, பெரும்பணக்காரர் அல்லாத சொற்ப வருவாய் உள்ளவர்கள் மிச்சப்படுத்தி வைப்பாக்குவதாகும்.

இனி நிதி நிலையங்களில் தமது பொருளை வைப்புச் செய்ய விரும்புபவரும், வைப்பினின்று பொருளைத் திருப்பிப் பெறுபவரும் மேற்கொள்ள வேண்டிய விதிகளைப்பற்றிக் கவனிப்போம்: நிரந்தர வைப்பாகப் பணம் வைக்க விரும்புபவர், நிதி நிலையத்துக்குச் சென்று, விஷயத்தைக் கூறினால், அவரிடம் ஒரு வைப்பு நமூனா[2] கொடுக்கப்படும். அதிற் கோரப்பட்டுள்ள விவரங்களைப் பூர்த்தி செய்து, அதையும் வைப்புக்குரிய தொகையையும் கொடுத்தால், நிதி நிலையத்தார் அவற்றைப் பெற்றுக்கொண்டு, பெற்றுக்கொண்ட தொகையையும், அதற்கு வட்டி விகிதமும், அதைத் திரும்பிப் பெற வேண்டிய காலமும், வைப்பு வைத்தவர் பெயரும் குறிக்கப்பட்ட தாளொன்றைத் தருவர். அதுவே வைப்பு வைக்கப்பெற்ற பொருளுக்குப் பொறுப்பு. ஆதலால், அதைக் கவனமாக வைத்துக்கொள்ள வேண்டும்.

---

1. Withdrawal 2. Remittance Chalan

நடப்பு வைப்புக்கு மேற்கொள்ள வேண்டிய முறை வேறு. வைப்பு வைக்க விரும்புபவர் நிதி நிலையம் சென்று தம் விருப்பத்தைத் தெரிவித்தால், அவர்களுக்கு விண்ணப்பத்தாள் ஒன்று தரப் படும். அதில் வேண்டப்பெறும் விவரங்களைப் பூர்த்தி செய்து, மாதிரிக் கையெழுத்துகள் மூன் றிட்டு, அத்தாளோடு வைப்பு வைக்க விரும்பும் தொகையைச் செலுத்த வேண்டும். அவற்றைப் பெற்றுக்கொண்டு நிதி நிலையத்தார் ஒரு பாஸ் புக்[1]கையும், ஒரு செக் புக்[2]கையும் தருவார்கள். பாஸ் புக்கில் வைப்பு வைத்தவர் பெயர், விலாசம், வைக்கப்பட்ட தொகை முதலிய விவரங்கள் குறிக் கப்பட்டிருக்கும். செக் புக்கு எதற்கு உபயோகம்? ஒருவர் தம்முடைய வைப்பினின்று பணம் பெற வேண்டுமானால், செக்குப் புத்தகத்தில் ஒரு தாளில் தேதி, தம் பெயர், வேண்டும் தொகை ஆகிய வற்றைக் குறித்துக் கையொப்பமிட்டு, நடப்புவைப் புக் கணக்கரிடம் கொடுக்கவேண்டும். அவர் அதைப் பெற்றுக்கொண்டு ஏதேனும் ஓர் எண் குறித்த ஒரு பித்தளைத் தகட்டைத் தருவார். அதை வைத்துக்கொண்டு சிறிது நேரம் காத்திருந் தால், பொருளைத் திருப்பித் தரும் கணக்கர் ஒவ் வோர் எண்ணைக் கூறிக் கூப்பிடுவார். தமது எண் குறிப்பிடும்போது, தகட்டைக் கொடுத்தால், பொருள் தரப்படும். ஒருவர் நடப்பு வைப்பி லிருந்து யாருக்காவது பணம் தர வேண்டுமானால், செக்குத் தாளில் அவர் பெயரையும், அவருக்குத் தர வேண்டிய தொகையையும் குறித்துத் தம்

1. Pass Book 2. Cheque Book

கையொப்பமிட்டுக் கொடுத்தால், பணம் பெற வேண்டுபவர் அதை நிதி நிலையத்திற் கொடுத்துப் பணத்தைப் பெற்றுக்கொள்வார். சேம வைப்பி னின்று பணம் திருப்பிப் பெறும் முறையும் இதுவே. ஆனால், அங்குச் செக்கு இல்லை. வாபஸ் நமூனு[1]வில் தேதியும், தொகையும் எழுதிக் கையொப்பமிட்டுத் தரவேண்டும். இம்முறையில் பொருளை வைப்பு வைத்தவர் மட்டுமே பெற முடியும். நிதி நிலையங்களின் மற்றுமுள்ள நடைமுறைகளைப்பற்றி நீங்கள் மேல் வகுப்புக்களில் அறிந்து கொள்ளலாம்.

### பயிற்சி

1. விடை எழுதுக:

(அ) நிதி நிலையம் என்பது யாது?

(ஆ) நிதி நிலையத்தின் தலைமை அதிகாரி யார்? அவர் யாரால் ஏற்படுத்தப்படுவார்?

(இ) நிதி நிலையங்கள் எத்தனை வகைப்படும்?

(ஈ) வாணிகத்துறை நிதி நிலையங்கள் எவ்வாறு நடைபெறுகின்றன?

(உ) நிதி நிலையங்களில் பொருள் வைப்பு முறை எத்தனை வகைப்படும்? ஒவ்வொன்றையும் விவரித்தெழுதுக.

(ஊ) நடப்பு வைப்புக்கு மேற்கொள்ள வேண்டிய முறை யாது?

2. உன் வகுப்பில் சேமிப்பு நிதி நிலையம் இருக்கிறதா? அது எவ்வாறு நடைபெறுகிறது? ஏற்கெனவே நிதி நிலையம் இல்லையெனில், ஒன்றைத் தொடங்குக.

3. பின் வரும் சொற்களை வாக்கியத்தில் அமைக்க:
மூதாதையர், நிதி நிலையங்கள், நிர்வாகிகள், வாணிகத்துறை.

---

1. Withdrawl Form

# செய்யுட்பகுதி

## I கடவுள் வணக்கம்

### 1. இறைவணக்கம்

அருள்பழுத்த பழச்சுவையே; கரும்பே! தேனே!
ஆரமிர்தே! என் கண்ணே! அரிய வான
பொருளனைத்துந் தரும்பொருளே! கருணை நீங்காப்
பூரணமாய் நின்ற ஒன்றே! புனித வாழ்வே!
கருதரிய கருத்ததனுட் கருத்தாய் மேவிக்
காலமுந்தே சமும்வகுத்துக் கருவியாதி
விரிவினையுங் காட்டியுயிர்த் திரளை யாட்டும்
விழுப்பொருளே! யான்சொலும்விண் ணப்பங்கேளே? (1)

—தாயுமானவர்

(குறிப்புரை) அருள் - கருணை, ஆர் அமிர்தம் - அரிய சாவா மருந்து, பூரணம் - முழுமுதல், புனிதம் - தூய்மை, கருதரிய - நினைத்தற்கு அரிய, மேவி - பொருந்த, விரி - மிகுதி யான, வினை - நல்வினை தீவினை, திரள் - கூட்டம், விழுப் பொருள் - மேலான பொருள்.

### 2. தமிழ்மொழி வாழ்த்து

நீராடுங் கடலுடுத்த நிலமடந்தைக் கெழிலொழுகும்
சீராரும் வதனமெனத் திகழ்பரத கண்டமிதில்
தக்கசிறு பிறைநுதலுந் தரித்தநறுந் திலகமுமே
தெக்கணமும் அதிற்சிறந்த திரவிடநற் றிருநாடும்;
அத்திலக வாசனைபோல் அனைத்துலகும் இன்பமுற
எத்திசையும் புகழ்மணக்க இருந்தபெருந் **தமிழணங்கே**
உன், சீரிளமைத் திறம்வியந்து செயல்மறந்து
வாழ்த்துதுமே. (2)

—பேராசிரியர் சுந்தரம் பிள்ளை

(கு - ரை.) நீர் ஆரும் - நீர் பொருந்திய, நிலமடந்தை - பூமிதேவி, எழில் - அழகு, சீர்ஆரும் - சிறப்புப் பொருந்திய,

வதனம் - முகம், நுதல் - நெற்றி, திலகம்-பொட்டு, தெக்கணம் - தெற்கு, வாழ்த்துதும் - வாழ்த்துவோம்.

# II. காதைப்பகுதி

## 1. நளவெண்பா

### கலிநீங்கு காண்டம்

#### நளன் அயோத்திநகர் அடைதல்

முன்னீர் மடவார் முறுவற் றிரள் குவிப்ப
நன்னீர் அயோத்தி நகரமடைந்தான்—பொன்னீர்
முருகுடைக்குந் தாமரையின் மொய்ம்மலரைத் தும்பி
அருகுடைக்கும் நன்னுட் டரசு. (1)

(கு - ரை.) முன்னீர் மடவார் - கடற்கரையிலுள்ள பெண்கள், (முன்னீர் - கடல்) முறுவல் திரள் குவிப்ப - முத்துப் போன்ற பற்களைக் காட்டிப் புன்னகை செய்ய, முருகு - மகரந்தப் பொடியை, உடைக்கும் - சிதறும், மொய் - திரண்ட, தும்பி-வண்டு, அருகு உடைக்கும் - அருகிலிருந்து பாடி நெகிழச் செய்யும், நன்னுட்டு அரசு - நல்ல நிடத நாட்டு அரசனுகிய நளன்.

#### நளன் அயோத்திநகர் அரசனிடம் தேர்த்தொழிலும் மடைத்தொழிலுஞ் செய்தல்

அன்னம் மிதிப்ப அலர்வழியுந் தேறல்போய்ச்
செந்நெல் விளைக்கும் திருநாடர்—மன்ன
மடைத்தொழிலுந் தேர்த்தொழிலும் வல்லன்யா னென்றுன்
கொடைத்தொழிலின் மிக்கான் குறித்து. (2)

(கு - ரை.) அலர்வழியும் தேறல் - பூவிலிருந்து வழிந்தோடும் தேன், செந்நெல் - ஒருவகைச் சிறந்தநெல், திருநாடர் மன்ன - அழகிய நாட்டில் வாழ்வாரது அரசனே! மடைத்தொழில் - சமையல் வேலை, கொடைத்தொழிலில் மிக்கோன் - ஈகையில் மேம்பட்டவனுகிய நளன், குறித்து - எண்ணி.

**நளனைத் தேடத் தமயந்தி புரோகிதனை அனுப்புதல்**

காரிருளிற் பாழ்மண் டபத்தேதன் காதலியைச்
சோர் துயிலி னீத்தல் துணிவன்றே ?—தேர் வேந்தற்
கென்றறைந்தால் நேர்நின் றெதிர்மாற்றந் தந்தாரைச்
சென்றறிந்து வாவென்றாள் தேர்ந்து. (3)

(கு - ரை.) கார் - கரிய, காதலி - மனைவி, சோர்துயி லில் - அயர்ந்த நித்திரையில், தேர்வேந்தற்கு - தேரை யுடைய அரசனுக்கு, அறைந்தால் - சொன்னால், எதிர்மாற்றம் - பதிலுரை, (எதிர்மொழி), தேர்ந்து - தெளிந்து.

**அயோத்திநகரில் புரோகிதன்**

கானகத்துக் காதலியைக் காரிருளிற் கைவிட்டுப்
போனதூஉம் வேந்தற்குப் போதுமோ ?—தானென்று
சாற்றினா னந்தவுரை தார்வேந்தன் தன்செவியில்
ஏற்றினான் வந்தான் எதிர். (4)

(கு - ரை.) காரிருளில் - கொடிய இருளில், போதுமோ - தக்கதோ, ஏற்றினான் - கொண்டான், தான் - அசை.

**நளன் விடை**

ஒண்டொடி தன்னை உறக்கத்தே நீத்தவும்
பண்டை விதியின் பயனேகாண்—தண்டரளப்
பூத்தாம வெண்குடையான் பொன்மகளை வெவ்வனத்தே
நீத்தான்என் றையுறேல் நீ. (5)

(கு - ரை.) ஒண்டொடி - ஒள்ளிய வளையலை அணிந்த தமயந்தி, விதி - ஊழ், தண்தரளம் - குளிர்ந்தமுத்து, தாமம் - மாலை, (முத்துமாலையும் பூமாலையும் தொங்கவிட்டிருந்த வெண் குடையையுடையவன்) என்றபடி. பொன்மகளை - இலக்குமி போன்ற பெண்ணை.

**புரோகிதன் தமயந்திக்குச் செய்தி தெரிவித்தல்**

"வாக்கினான் மன்னவனை ஒப்பான் மறித்தொருகால்
ஆக்கையே, நோக்கின், அவன் அல்லன்—பூக்கமழுங்
கூந்தலாய் மாற்றக் குலப்பாகன் என்றுரைத்தான்
ஏந்துநூல் மார்பன் எடுத்து. (6)

(கு - ரை.) மன்னவனை - நளனை, மறித்து - மீண்டும், குலத்தான் - குலத்தால் தேர்ப்பாகன், ஏந்துநூல் மார்பன் - பூநூலைத் தரித்த அந்தணன்.

தமயந்தி புரோகிதனுக்கு உரைத்த பதில்

மீண்டோர் சுயம்வரத்தை வீமன் திருமடந்தை
பூண்டாளென் றந்தணநீ போயுரைத்தால்—நீண்ட
கொடைவேந்தற் கித்தூரந் தேர்க்கோலங் கொள்வான்
படைவேந்தன் என்ருள் பரிந்து. (7)

(கு - ரை.) மீண்டும் - திரும்பவும், வீமன் திருமடந்தை - வீமனது செல்வப் புதல்வியாகிய தமயந்தி, கொடை வேந்தற்கு - இருதுபன்னனுக்கு, தேர்க்கோலம் - தேர்ப்பாகனது கோலம், படைவேந்தன் - நளன், பரிந்து - வருந்தி.

அயோத்தியரசனுக்கு மறு சுயம்வரத்தைத் தெரிவித்தல்

எங்கோன் மகளுக் கிரண்டாஞ் சுயம்வரமென்
றங்கோர் முரசும் அறைவித்தான்—செங்கோலாய்
அந்நாளும் நாளை யளவென்ருன் அந்தணன்போய்த்
தென்னுளுந் தாரானைச் சேர்ந்து. (8)

(கு - ரை.) எங்கோன் மகளுக்கு - எமது அரசனுகிய வீமனது புதல்விக்கு, அந்தணன் - (சுவேதனன் என்னும்) பிராமணன், தென்ஆளும் - வண்டுகள் மொய்க்கின்ற, தாரானை - மலர் மாலை யணிந்த இருதுபன்னனை, அந்நாளும் நாளை அளவு - அந்தச் சுயம்வரத்திற்குக் குறிப்பிட்ட தினமும் நாளை யேயாகும்.

(வாகுகன்) விதர்ப்ப நாடு செல்லத் தேர்
கொணர்ந்து நிறுத்தல்

" ஒற்றைத் தனியாழித் தேர்என்ன ஓடுவதோர்
கொற்ற நெடுந்தேர் கொடுவேந்தேன்—மற்றிதற்கே
போந்தேறு கென்றுரைத்தான் பொம்மென் றளிமுரலத்
தீந்தேறல் வார்க்குந்தார்ச் சேய். (9)

(கு - ரை.) அளி - வண்டுகள், பொம் என்று முரல - பொம் என்று ஓசை யுண்டாக ஒலித்துக் கொண்டிருக்குமாறு, தீம்தேறல் - தித்திப்பாகிய தேனை, வார்க்கும் - ஒழுகச் செய்

கின்ற, தார் - பூமாலையை அணிந்த, சேய் - செவ்வேளனைய நளன், தனி - ஒப்பற்ற, ஒற்றை ஆழி - ஒரே சக்கரத்தையுடைய (சூரியனது), கொற்றம் - வெற்றி பொருந்திய, போந்து - வந்து.

### தேர் சென்ற வேகம்

மேலாடை வீழ்ந்த தெடுஎன்றுன் அவ்வளவில்
நாலாறு காதம் நடந்ததே—தோலாமை
மேல்கொண்டான் ஏறிவர வெம்மைக் கலிச்சூதின்
மால்கொண்டான் கோல்கொண்ட மா. (10)

(கு - ரை.) மேலாடை - உத்தரியம் (சால்வை), அவ்வள வில் - அந்த நேரத்திற்குள் (அப்படிச் சொல்லி வாய்மூடும் நேரத்திற்குள்), நாலாறு - பத்து, (நான்கு அல்லது ஆறு என் றும், இருபத்து நான்கு என்றும் பொருள் கூறுவோர் உளர்). காதம் - நாலு கூப்பிடு கொண்டதூரம், தோலாமை - தோல்வி யுருமை, மா - குதிரை, வெம்மை - கொடிய, கலிச் சூதின் - கலி புருடனுடைய வஞ்சனையினுலே, மால்கொண்டான் - மயக்கங் கொண்டவனுகிய நளன், கோல் கொண்ட - சாட்டைக்கோல் கொண்டு நடாத்திய.

### கலி நளனை விட்டு நீங்குதல்

வண்டார் வளவயல்சூழ் மள்ளுவநாட் டெங்கோமான்
தண்டார் புனைசந் திரன்சுவர்க்கி—கொண்டாடும்
பாவலன்பால் நின்ற பசிபோல நீங்கிற்றே
காவலன்பால் நின்ற கலி. (11)

(கு - ரை.) வண்டு ஆர் - வண்டு மொய்கின்ற, தண்டார் - தண் + தார் - குளிர்ந்த பூமாலை, புனை - அணிந்த, பாவலன் - புலவன்.

## 2. பெரியபுராணம்

### மனுநீதி கண்ட புராணம்

#### திருவாரூர்ச் சிறப்பு

நிலம கட்கழ கார்திரு நீள்நுதல்
திலக மொப்பது செம்பியர் வாழ்பதி
மலர்ம கட்குவண் டாமரை போல்மலர்ந்
தலகில் சீர்த்திரு வாரூர் விளங்குமால். (1)

(கு - ரை.) நிலமகள் - பூமிதேவி, திலகம் - பொட்டு, செம்பியர் - சோழர், மலர்மகள் - இலக்குமி, அலகில் - அள வில்லாத.

அன்ன தொல்நக ருக்கர சாயினன்,
துன்னும் செங்கதி ரோன்வழித் தோன்றினன் ;
மன்னு சீர்அந பாயன் வழிமுதல்
மின்னு மாமணிப் பூண்மனு வேந்தனே. (2)

(கு - ரை.) துன்னு - அடர்த்தியான, செங்கதிரோன் - சூரியன், மன்னு - நிலைபெற்ற.

மனுவேந்தன் சிறப்பு

மண்ணில் வாழ்தரு மன்னுயிர் கட்கெலாங்
கண்ணும் ஆவியும் ஆம்பெருங் காவலான் ;
விண்ணு ளார்மகிழ் வெய்திட வேள்விகள்
எண்ணி லாதன மாணஇ யற்றினன். (3)

(கு - ரை.) ஆவி - உயிர், வேள்வி - யாகம், மாண - சிறப்புற, இயற்றினன் - செய்தான்.

மனுவேந்தன் தேவிக்குப் புதல்வன் பிறத்தல்

அறம்பொரு ளின்ப மான
அறநெறி வழாமல் புல்லி,
மறங்கடிந்(து), அரசர் போற்ற
வையகங் காக்கு நாளில்,
சிறந்தநற் றவத்தாற் றேவி
திருமணி வயிற்றின் மைந்தன்
பிறந்தன னுலகம் போற்றப்
பேரரிக் குருளை யன்னன். (4)

(கு - ரை.) புல்லி - தழுவி, மறம் - பாவம், கடிந்து - விலக்கி, அரிக்குருளை - சிங்கக்குட்டி.

மைந்தன் வளர்ச்சியடைதல்

அளவில்தொல் கலைகள் முற்றி,
அரும்பெறல் தந்தை மிக்க
உளமகிழ் காதல் கூர,
ஓங்கிய குணத்தால் நீடி

இளவர சென்னுந் தன்மை
யெய்துதற் கணிய னாகி,
வளரிளம் பரிதி போன்று
வாழுநா ளொருநாள் மைந்தன் (5)

(கு - ரை.) கூர - அதிகரிக்க, அணியன் - நெருங்கிய தகுதியுடையவன். பரிதி - சூரியன்.

**மைந்தன் தேர்மீது பவனிபோதல்**

திங்கள்வெண் கவிகை மன்னன்
திருவளர் கோயில் நின்று
மங்குல்தோய் மாட வீதி
மன்னிளங் குமரர் சூழக்
கொங்கலர் மாலை தாழ்ந்த
குங்குமக் குவவுத் தோளான்
பொங்கிய தானை சூழத்
தேர்மிசைப் பொலிந்து போந்தான். (6)

(கு - ரை.) திங்கள் - சந்திரன், கவிகை - குடை, கோயில்-அரண்மனை, மங்குல் - மேகம், கொங்கு - (பூந்தாது) தேன், குவவு - திரண்ட, தானை - சேனை.

**பசுக்கன்று தேர்ச்சக்கரத்தில் அடிபட்டு இறத்தல்**

அம்புனிற் றாவின் கன்றோ
ரபாயத்தி னூடு போகிச்
செம்பொனின் றேர்க்கால் மீது
விசையினுற் செலப்பட் டங்(கு)
உம்பரி னடையக் கண்டங்
குருகுதாய் அலமந் தோடி
வெம்பிடும்; அலறும்; சோரும்;
மெய்ந்நடுக் குற்று வீழும். (7)

(கு - ரை.) புனிற்று ஆ - புதிதாகக் கன்றை ஈன்ற பசு, தேர்க்கால் - தேர்ச்சக்கரம், உம்பர் - தேவர், அமைந்து - துன்புற்று, வெம்பிடும் - விம்மும், அலறும் - கதறும், சோரும் - தளரும்.

### மைந்தன் துயருறல்

மற்றது கண்டு மைந்தன்
வந்ததிங் கபாய ! மென்று
சொற்றடு மாறி, நெஞ்சில்
துயருழந் தறிவ ழிந்து
பெற்றமுங் கன்றும் இன்றென்
உணர்வெனும் பெருமை மாளச்
செற்ற; என் செய்கேன் ! என்று
தேரினின் றிழிந்து வீழ்ந்தான். (8)

(கு - ரை.) பெற்றம் - பசு, உணர்வு - அறிவு.

### பசு அரசனின் ஆராய்ச்சிமணியை அடித்தல்

தன்னுயிர்க் கன்று வீயத்
தளர்ந்தவாத் தரியா தாகி,
முன்னெருப் புயிர்த்து விம்மி,
முகத்தினிற் கண்ணீர் வார,
மன்னுயிர் காக்குஞ் செங்கோல்
மனுவின்பொற் கோயில் வாயில்
பொன்னணி மணியைச் சென்று
கோட்டினுற் புடைத்த தன்றே. (9)

(கு - ரை.) வீய - இறக்க, ஆ - பசு, உயிர்த்து - பெருமூச்சுவிட்டு, வார - சோர, கோயில் - அரசன் மாளிகை, கோட்டினுல் - கொம்பினுல்.

### மன்னவன் அமைச்சரிடம் பசுவின் குறையை வினுதல்

மன்னவன் அதனைக் கேளா,
வருந்திய பசுவை நோக்கி,
என்னிதற் குற்ற(து) என்பான்
அமைச்சரை இகழ்ந்து நோக்க,
முன்னுற நிகழ்ந்த வெல்லாம்
அறிந்துளான் முதிர்ந்த கேள்வித்
தொன்னெறி அமைச்சன் மன்னன்
தாளிணை தொழுது சொல்வான். (10)

(கு - ரை.) தாளிணை - பாதங்களை, தொன்னெறி - பழமையான நெறி.

**அமைச்சர் பசுவின் செய்தியைச் சொல்லுதல்**

'வளவ' நின் புதல்வன் ஆங்கோர்
மணிநெடுந் தேர்மேல் ஏறி
அளவில்தேர்த் தானை சூழ
அரசுலாந் தெருவிற் போங்கால்,
இளையஆன் கன்று தேர்க்கால்
இடைப்புகுந் திறந்த தாகத்
தளர்வுறும் இத்தாய் வந்து
விளைத்ததித் தன்மை; என்றான். (11)

(கு - ரை.) வளவ - சோழனே, தானை - சேனை, ஆன் கன்று - பசுங்கன்று, தளர்வு - சோர்வு, விளைத்தது - உண்டாக்கியது.

**அரசன் அடைந்த துயரம்**

அவ்வுரை கேட்ட வேந்தன்
ஆவுறு துயர மெய்தி,
வெவ்விடந் தலைக்கொண் டாற்போல்
வேதனை அகத்து மிக்(கு) 'இங்
கிவ்வினை விளைந்த வாறு!' என்
றிடருறும், இரங்கும்; ஏங்கும்;
'செவ்விதென் செங்கோல்!' என்னும்;
தெருமரும்; தெளியும்; தேறான். (12)

(கு - ரை.) ஆ உறு துயரம் - பசு அடைந்த துன்பம். வெவ்விடம் - கொடிய விடம். செவ்விது - செம்மையானது, தெருமரும் - சுழலும், தெளிவு - துணிவு, தேறான் - மனம் தெளியான்.

**அமைச்சர் நீதி உரைத்தலும், அரசன் உத்தரமும்**

மந்திரிகள் அதுகண்டு, மன்னவனை யடிவணங்கிச்
'சிந்தைதளர்ந் தருளுவது மற்றிதற்குத் தீர்வன்றால்,

கொந்தலர்தார் மைந்தனைமுன் கோவதைசெய் தார்க்குமறை
அந்தணர்கள் விதித்தமுறை வழிநிறுத்த லறம்,' என்றார். (13)

(கு - ரை.) சிந்தை தளர்ந்து - மனம் கசிந்து, தீர்வு அன்று - முடிவன்று, ஆல் - ஆதலால், கொந்து—(கொத்து) கூட்டம், கோவதை - பசுக்கொலை, மறை - வேதம், நிறுத்தல் - கோடாமை.

வழக்கென்று நீர்மொழிந்தால் மற்றதுதான் வலிப்பட்டுக்
குழக்கன்றை இழந்தலறுங் கோவுறுநோய் மருந்தாமோ?
இழக்கின்றேன் மைந்தனையென் றெல்லீரும் சொல்லியவிச்
சழக்கின்று நானியைந்தால் தருமந்தான் சலியாதோ? (14)

(கு - ரை.) குழக்கன்று - இளங்கன்று, சழக்கு - குற்றம், (சழக்கு இன்று), சலித்தல் - அசைவு கொள்ளுதல்.

'என்மகன்செய் பாதகத்துக்
கிருந்தவங்கள் செயவிசைந்தே
அன்னியன்ஓர் உயிர் கொன்றால்
அவனைக்கொல் வேணுனல்
தொன்மனுநூல் தொடைமனுவால்
துடைப்புண்ட தெனும் வார்த்தை
மன்னுலகில் பெறமொழிந்தீர்;
மந்திரிகள் வழக்(கு)!' என்றான். (15)

(கு - ரை.) இருந்தவம் - பெரிய தவம் (பிராயச் சித்தம்), தொன்மை - பழமை, தொடை - தொடர்ச்சி, துடைப்புண்டது - அழிந்தது.

எனமொழிந்து, 'மற்றிதனுக்
கினியிதுவே செயல்; இவ்வான்
மனமழியும் துயரகற்ற
மாட்டாதேன் வருந்தும்இது;

தனதுறுபே ரிடர்யானும்
தாங்குவதே கருமம்,' என
அனகனரும் பொருள் துணிந்தான் :
அமைச்சருமஞ் சினரகன்ருர். (16)

(கு - ரை.) இவ்வான் - (இவ் + ஆன்) இப்பசு, பேரிடர் - பெரிய துன்பம், அனகன் - குற்றமற்ற அரசன்.

**அரசன் அமைச்சனை நோக்கி மகன்மேல் தேரைச் செலுத்துவாய் என்ன, அமைச்சன் துன்புற்று உயிர்விடுதல்**

மன்னவன்தன் மைந்தனையங்
கழைத்தொருமந் திரிதன்னை,
'முன்னிவனை அவ்வீதி
முரண்தேர்க்கால் ஊர்க,' என
அன்னவனும் அதுசெய்யா
தகன்றுதன்ற ருயிர்துறப்பத்
தன்னுடைய குலமகனைத்
தான்கொண்டு மறுகணைந்தான். (17)

(கு - ரை.) முரண் - வலி, ஊர்க - செலுத்துக, மறுகு - வீதி.

**அரசன் மகன்மேல் தேர் செலுத்துதல்**

ஒருமைந்தன் தன்குலத்துக்
குள்ளான்என் பதுமுணரான் ;
'தருமந்தன் வழிச்செல்கை
கடன்,' என்று தன்மைந்தன் ;
மருமம்தன் தேராழி
உறவூர்ந்தான் மனுவேந்தன் ;
அருமந்த அரசாட்சி
அரிதோ,மற் றெளிதோதான் ! (18)

(கு - ரை.) கடன் - கடமை, மருமம் - மார்பு, தேர் ஆழி - தேர்ச் சக்கரம், அருமந்த - அருமருந்தன்ன.

### வானவர் மகிழ்ச்சி யடைதல்

தண்ணளிவெண் குடைவேந்தன்
செயல்கண்டு தரியாது
மண்ணவர்கண் 'மழைபொழிந்தார்;
வானவர்பூ மழைசொரிந்தார்,'
அண்ணலவன் கண்ணெதிரே
அணிவீதி மழவிடைமேல்
விண்ணவர்கள் தொழநின்றான்
**வீதிவிடங் கப்பெருமான்.** (19)

(கு - ரை.) தரியாது - பொறாமல், மண்ணவர் - உலகத்தவர், வானவர் - தேவர், அண்ணல் - அரசன், மழவிடை - இளமை பொருந்திய இடபம், வீதிவிடங்கப் பெருமான் - திருவாரூரில் கோவில்கொண்டுள்ள சிவபெருமான் பெயர்.

### அரசன் மகன், அமைச்சன், பசுங்கன்று, உயிர்த்து எழுதல்

அந்நிலையே உயிர்பிரிந்த ஆன்கன்றும் அவ்வரசன்
மன்னுரிமைத் தனிக்கன்றும் மந்திரியும் உடனெழலும்
இன்னபரி சானனென் றறிந்திலன்வேந் தனும்,யார்க்கும்
முன்னவனே முன்னின்றால் முடியாத பொருளுளதோ.
(20)

—சேக்கிழார்

(கு - ரை.) ஆன் கன்று - பசுவின் கன்று, தனிக்கன்று - ஒப்பற்ற இளவரசன், பரிசு - தன்மை, முன்னவன் - கடவுள் (சிவபெருமான்).

## 3. குசேலோபாக்கியானம்

### குசேலர் கண்ணனைக் கண்டது

**வாயில் காவலர் குசேலரை உள்ளேவிடாது தடுத்து, அரச சபைக்குச் செல்வார்க்கு வேண்டும் தகுதிகள் இவை எனக் கூறல்**

பொருள்நனி யுளனென் றியாரும்
புகலும் ஓர் வார்த்தை வேண்டும்,
இருகையும் கடகம் வேண்டும்
இலங்குகுண் டலங்கள் வேண்டும்,
வருவிரல் ஆழி வேண்டும்
மார்பிடை மதாணி வேண்டும்,
உருவமுத் தாரம் வேண்டும்
உயர்ந்தப்பட் டாடை வேண்டும். (1)

(குறிப்புரை.) நனி - மிகுதியும், புகலும் - சொல்லும், வார்த்தை - புகழ் வார்த்தை, கடகம் - கையில் அணியும் அணி வகை, குண்டலம் - காதணி, ஆழி - மோதிரம், மதாணி - பெரிய தோர் (பதக்கம்), உருவம் - அழகு, ஆரம் - மாலை.

சிவிகைமுன் ஊர்தி வேண்டும்,
செழும்பெருட் செலவு வேண்டும்,
குவிகைஏ வலரும் வேண்டும்,
கோலம்ஆர்ந் திருக்க வேண்டும்,
கவிகைதாங் குநரும் வேண்டும்,
கையுறை சிறப்ப வேண்டும்,
அவிகையில் விளக்கம் வேண்டும்,
அரசவை குறுகு வார்க்கே. (2)

(கு - ரை.) முன் - முதலாகிய, ஊர்தி - வாகனம், செழும் பொருள் செலவு வேண்டும் - மிகுந்த பொருளைப் பலர்க்கும் கொடுத்துச் செலவு செய்து கொண்டிருக்க வேண்டும், குவிகை - (வணக்கத்தின் அறிகுறியாக) குவிந்த கை, கோலம் ஆர்ந்து - அலங்காரம் நிரம்பி, கவிகை - குடை, கையுறை - காணிக்கை, அவிகையில் விளக்கம் - அணையாத தீபம் (மங்களத்தின் அறி குறியாக அமைந்த தீபம்), அவை - சபை.

குசேலரது எண்ணங்கள்

மின்செய்த மதாணி யாம், முத்
தாரமாம், விளங்கு பட்டாம்,
பொன்செய்த ஊர்தி யாம், இப்
போதுயாம் பெறுவ தெங்கே ?
நன்செயல் நம்மூ தாதை
நாளினுங் கேட்ட தின்ருல்,
என்செய்வாம் ? எண்ணு தொன்றை
இயற்றுதல் என்றும் தீதே. (3)

(கு - ரை.) ஊர்தி - வாகனம், மூதாதை - முன்னோர்கள், எண்ணுது - முற்ற ஆராயாது, 'எண்ணித் துணிக கருமம்' என்பதனை இது நினைவுறுத்துகிறது.

காவலர் கண்ணனிடம் குசேலர் வருகையைத் தெரிவித்தல்

ஆதிநாள் ஐய நின்னோ
டருங்கலை கற்று ளானும்,
போதவும் சிறந்த நட்புப்
பூண்டுகொண் டவனும் ; கந்தை
மேதகக் கொண்ட நீரான்,
மெய்ம்மறை யவர்கு லத்தான்
கோதறு குணத்தின் மிக்கான் ;
குசேலன்என் றியம்பி னுன் பேர். (4)

(கு - ரை.) போதவும் - மிகவும், மேதக - மேன்மையாக, மறையவர் - அந்தணர், இயம்பினுன் - சொல்லினுன்.

கண்ணனது மகிழ்ச்சியுரை

தாயது வருகை கேட்ட
தனியிளங் குழவி போன்று
நேமியக் குடைய னுகி
நெஞ்சினுள் உவகை பூப்பப்

'போயழைத் திடுமின் இன்னே
போயழைத் திடுமின் இன்னே
போயழைத் திடுமின் இன்னே'
எனவிரை பொருளிற் சொற்றான். (5)

(கு - ரை.) தாய் - தாய்ப் பசு, தனியிளங்குழவி - தனிப் பட்டுப் பிரிந்திருக்கிற இளமையான கன்று, நேயம் - அன்பு, போயழைத்திடுமின் என அடுக்கு வந்தது விரைவின் பொருட்டு.

### கண்ணன் வினவுதல்

'பந்தனை அகன்ற மேலோய்
பற்பல நாட்குப் பின்பு
வந்தனை, எனக்கென் கொண்டு
வந்தனை? அதனை இன்னே
தந்தனை யாயின் நன்று
தருசுவைப் பக்க ணத்தென்
சிந்தனை நின்ற' தென்றான்
தெரிவரும் வஞ்சக் கள்வன். (6)

(கு - ரை.) பந்தனை - உலகபாசம், பக்கணம் - பட்சணம், தெரிவரும் - யாராலும் அறிய முடியாத, வஞ்சக் கள்வன் - வஞ்சத்தையுடைய கள்வன்.

### குசேலர் கொணர்ந்த அவற் பொதியைக் கண்ணன் காணுதல்

நடலைதீர்ந் தவன்மெய்ப் போர்த்த
நாள்பல கண்ட கந்தைப்
படர்தலைச் சுருக்கி வாங்கிப்
பாங்குவைத் தினிதின் ஆய்ந்து
விடல்அருங் கற்பு வாய்த்த
மின்னனார் வணங்குந் தெய்வம்
திடமுற முடித்து வைத்த
சிறுபொதி கண்டு கொண்டான். (7)

(கு - ரை.) நடலை - துன்பம், தீர்ந்தவன் - குசேலனைக் குறித்தது, படர்தலை - விரிந்த தலைப்பக்கத்தை, பாங்கு-பக்கத்திலே, விடலறும் கற்பு வாய்த்த மின்னனார் வணங்கும் தெய்வம்- கைவிடுவதற்கரிய கற்புடைய பெண்கள் வணங்குதற்குரிய பெண்தெய்வமாகிய சுசீலை.

கண்ணன் அவல் உண்ணல்

மலிதரும் அன்பின் வந்த
வன்பொதி அவிழ்த்து நோக்கி
'வலிதரும் அவற்றுள் நன்று
வாய்த்தது நமக்கி' தென்று
ஒலிதரு கழற்கால் ஐயன்
ஒருபிடி அவலைக் காதல்
பொலிதர எடுத்து வாயிற்
போகட்டுக் கொண்டான் மாதோ. (8)

—வல்லூர் தேவராச பிள்ளை

(கு - ரை.) வலிதருமவற்றுள் - எனக்கு வலிமையைத் தரக் கூடியவற்றுள், இது நன்று வாய்ந்தது என்க. காதல் பொலிதர- அன்புமிக்கு விளங்க, மலிதரும் - நிறைவைத் தருகின்ற.

## 4. பாஞ்சாலி சபதம்

### திருதராட்டிரனும் துரியோதனனும்

#### சகுனி திருதராட்டிரனிடம் சொல்லுதல்

மற்றதன் பின்னர் இருவரும்—அரு
மந்திரக் கேள்வி யுடையவன்—பெருங்
கொற்றவர் கோன்திரு தாட்டிரன்—சபை
கூடி வணங்கி யிருந்தனர் ;—அருள்
அற்ற சகுனியுஞ் சொல்லுவான் ;—ஐய !
ஆண்டகை நின்மகன் செய்திகேள் ;—உடல்
வற்றித் துரும்பொத் திருக்கிறான் ;—உயிர்
வாழ்வை முழுதும் வெறுக்கிறான். (1)

(கு - ரை.) இருவரும் - துரியோதனனும் சகுனியும், மந்திரக் கேள்வி - மந்திராலோசனை, கொற்றவர் - அரசர்.

### திருதராட்டிரன் பதில் கூறுதல்

கன்னச் சகுனியும் இங்ஙனே—பல
கற்பனை சொல்லித்தன் உள்ளத்தின்—பொருள்
கொள்ளப் பகட்டுதல் கேட்டபின்—பெருங்
கோபத் தோடேதிருத ராட்டிரன்,—'அட
பிள்ளையை நாசம் புரியவே—ஒரு
பேயென நீ வந்து தோன்றினாய் ;—பெரு
வெள்ளத்தைப் புல்லொன் றெதிர்க்குமோ ?—இள
வேந்தரை நாம்வெல்ல லாகுமோ ? (3)

(கு - ரை.) கற்பனை - (பொய்யான) புனைந்துரைகளைச் சொல்லி, கொள்ள - அங்கீகரிக்க, பகட்டுதல் - ஆடம்பர வார்த்தைகளைச் சொல்லுதல். இளவேந்தர் - பாண்டவர்.

### துரியோதனன் தீமொழி

பாம்பைக் கொடியென் றுயர்த்தவன்—அந்தப்
பாம்பெனச் சீறி மொழிகுவான் ;—'அட
தாம்பெற்ற மைந்தர்க்குத் தீதுசெய்—திடுந்
தந்தையர் பார்மிசை யுண்டுகொல் ?—கெட்ட
வேம்பு நிகர்இவ னுக்கு நான்,—சுவை
மிக்க சருக்கரை பாண்டவர் ;—அவர்
தீம்பு செய்தாலும் புகழ்கின்றான் ;—திருத்
தேடினும் என்னை இகழ்கின்றான். (3)

(கு - ரை.) பாம்பைக் கொடியென உயர்த்தவன் - அரவக் கொடியோனாகிய துரியோதனன், நான் வேம்பு, பாண்டவர் சருக்கரை, தீம்பு - கெடுதி, திரு - செல்வம்.

### திருதராட்டிரன் பதில்

ஆரியர் செய்வாரோ—இந்த
ஆண்மை யிலாச்செயல் எண்ணுவரோ ?
பாரினிற் பிறருடைமை—வெஃகும்
பதரினைப் போல் ஒரு பதர் உண்டோ ?

பேரியற் செல்வங்களும்—இசைப்
பெருமையும் எய்திட விரும்புதி யேல்
காரியம் இதுவாமோ?—எந்தன்
காளை அன்றே? இது கருதல், அடா! (4)

(கு - ரை.) ஆரியர் - நாகரிகம் உள்ளவர்கள், வெஃகும் - விரும்பும், (சூதாடுதற்குப் பாண்டவர்களை அழைத்துவந்து, சூதாடச்செய்து, அவரை நாடும் நகரும் இழக்கும்படி செய்த லைக்) கருதல் - எண்ணுதே.

துரியோதனன் பதில்

தந்தை இஃது மொழிந்திடல் கேட்டே,
தாரி சைந்த நெடுவரைத் தோளான்
'எந்தை, நின்னெடு வாதிடல் வேண்டேன்
என்று பன்முறை கூறியுங் கேளாய்;
வந்த காரியங் கேட்டிமற் றுங்குன்
வார்த்தை யின்றி அப் பாண்டவர் வாரார்,
இந்த வார்த்தை உரைத்து விடாயேல்,
இங்கு நின்முன்என் ஆவி இறுப்பேன்?' (5)

(கு - ரை.) ஆவி - உயிர், இறுப்பேன் - முடிப்பேன்.

திருதராட்டிரன் சம்மதித்தல்

'விதி! விதி! விதி! மகனே—இனி
வேறெது சொல்லுவன், அடமகனே!
கதியுறுங் காலன் அன்றே—இந்தக்
கயமகன் எனநினைச் சார்ந்து விட்டான்!
கொதி யுறும் உளம் வேண்டா;—நின்றன்
கொள்கையின் படி அவர் தமை அழைப்பேன்;
வதியுறு மனை செல்வாய்'—என்று
வழியுங் கண் ணீரொடு விடை கொடுத்தான். (6)

—சி. சுப்பிரமணிய பாரதியார்

(கு - ரை.) அட - விளித்தற் குறிப்பு, கயமகன் - கீழ்மகன், இது சகுனியைக் குறித்தது, வதியுறு - வசித்தலையுறுகின்ற, வாழ்கின்ற.

# 5. அரிச்சந்திர புராணம்

## மயான காண்டம்

உற்ற நாளையில் வசிட்டன்அவ் வும்பர்கோன் தனக்குக்
கொற்றவா நினக்கி யான்புகல் கோதிலா னிடத்தே
அற்றை நாள்முதற் கௌசிகன் அமைக்கும்ஊ றனைத்தும்
இற்றை நாள்விடும் காண்பம்நீ எழுகஎன் றிசைத்தான். (1)

(கு - ரை.) உற்ற நாளையில் - குறிப்பிட்ட நாளில், கோன் - தேவேந்திரன், கௌசிகன் - விசுவாமித்திரன், ஊறு - துன்பம்.

தாழும் வார்சடை மாமுனி அவ்வுரை சாற்றச்
சூழு மாந்தரும் தும்புரு நாரதர் தாமும்
வாழும் வச்சிர பாணியும் வசிட்டனும் யாரும்
ஏழு பாலருங் காணவந் தந்தரத் திருந்தார். (2)

(கு - ரை.) தாழும் வார் சடை - தொங்குகின்ற நீண்ட சடையையுடைய, சாற்ற - சொல்ல, வச்சிரபாணி - வச்சிராயு தத்தை யுடைய இந்திரன், ஏழுபாலர் - எட்டுத்திக்குப் பாலகரில் இந்திரனை ஒழிந்த எழுவர் (அக்கினி, இயமன், நிருதி, வரு ணன், வாயு, குபேரன், ஈசானன்), அந்தரத்து - ஆகாயத்தில்.

அந்த வேளையிற் கௌசிகன் விரைந்துவந் தரசே
இந்த நோதக வெய்தல்என் ? எனக்குநீ முன்னம்
தந்த நாடு யான் தந்திலேன் எனுமொழி சாற்றி
உய்ந்து நாடும்இவ் வுயிர்களும் பெறுகென உரைத்தான். (3)

(கு - ரை.) வேளையில் - சமயத்தில், நோதகவு - துன்பம், உய்ந்து - பிழைத்து.

சேர நின்றவன் செப்பிய தாங்கவ ரன்றி
யாருங் கேட்டிலர், வசிட்டனும் அமரரும் அறிந்தார் ;
வீர வேந்தனும் மங்கையும் அவனடி வீழ்ந்திங்
கியாரைநீ இந்த ஏழைமைக் காட்செய்தி என்றார். (4)

(கு - ரை.) ஏழைமைக்கு - கீழ்மைச் செயலுக்கு.

சேய்மை அண்மையில் உயிர்க்கொரு
துணையெனச் சிறந்த
வாய்மை யால்அகந் தூய்மையாம்
மற்றிலை ; புறத்தைத்
தூய்மை செய்வது நீரலாற்
சொல்லின்வே றுளதோ ?
நோய்மை செய்யினும் வாய்மையே
நோன்பெமக் கறிதி. (5)

(கு - ரை.) சேய்மை - தூரம், அண்மை - சமீபம், வாய்மை - சத்தியம் ; நோய்மை - துன்பம், நோன்பு - விரதம்.

இம்மை அம்மைவீ டெனமறை
புலங்கொள இயம்பும்
மும்மை யுந்தரு முறையுடைத்
தெனுநிலை முரணி
எம்மை ஆழ்வயிற் றடக்கிமீட்
டுமிழ்கலா எரிவாய்
வெம்மை கூர் நர குய்க்கினும்
மெய்ம்மையை விடேமால். (6)

(கு - ரை.) இம்மை - இப்பிறப்பு, அம்மை - மறுபிறப்பு, வீடு - மோக்ஷம், முரணி - மாறுபட்டு, உமிழ்கலா - வெளிப் படுத்தாத.

பதிஇ ழந்தனம், பாலனை இழந்தனம், படைத்த
நிதிஇ ழந்தனம், இனிநமக் குளதென நினைக்கும்
கதிஇ ழக்கினும் கட்டுரை இழக்கிலேம் என்றூர்
மதிஇ ழந்துதன் வாயிழந் தருந்தவன் மறைந்தான். (7)

—வீரை. ஆசுகவிராயர்

(கு - ரை.) பதி - ஊர், கதி - மோக்ஷம், கட்டுரை - சொன்ன வார்த்தை, மதி - அறிவு.

## 6. பஞ்சதந்திரம்

### பகற்கனவு

உரைக்குமிக் கதையே தென்னில்,
ஓதுமோர் நகரந் தன்னில்,
தரித்திர பிரம சாரி
சார்ந்தொரு சிரார்த்தத் துண்டான் ;
அரைத்திடு பொரிமாத் தோண்டி
அவற்கொரு மறையோன் ஈந்தான் ;
திருத்தியிற் பருப்பும் சோறும்
தின்றதோர் மயக்கத் தாலே. (1)

(கு - ரை.) பிரமச்சாரி - மணம் ஆகாதவன். சிரார்த்தம் - திவசம், மறையோன் - பிராமணன், திருத்தியில் - திருப்தியாக.

மற்ருெரு நகர்க்குச் செல்லும்
வழியிலோர் மணற்ற டத்தில்
சற்ருெரு கணப்போ தங்கே
தரித்தவ னிருந்து நெஞ்சில்
உற்றகா ரியங்கள் கோடி
உன்னினன் : ' இந்த மாவை
விற்றுநாம் ஆடு வாங்கி
மேய்க்கிலோர் இரண்டு குட்டி. (2)

(கு - ரை.) மணல் தடத்தில் - மணல் நிறைந்த வழியில், கணப்போது - சிறிது நேரம், உன்னினன் - நினைத்தான்.

' போடும் ; அவ் விரண்டி லொன்ரும்
பொலிகடா தன்னை விற்று
நாடுபெண் ணுடி ரண்டு
நயவிலை யாகக் கொள்வோம்
ஆடொரு நாலாம் ; அந்த
ஆடுகள் இரண்டி ரண்டாய்ப்
போடுமக் குட்டி யோடு
பொருந்திய பன்னி ரண்டாம். (3)

(கு - ரை.) நயவிலை - குறைந்த விலை.

'பன்னிரண் டாடும் விற்றுப்
பசுக்களோர் இரண்டு கொள்வோம்;
தன்னிலே பட்டி மேய்ந்து
தருக்கியே இரண்டும் ஈனும்;
மன்னுபால் நெய்யும் விற்று
மற்றிரு பசுவும் கொள்வோம்;
அன்னவப் பசுக்கள் ஆறும்
ஆறுசேங் கன்று நல்கும். (4)

(கு - ரை.) தன்னிலே பட்டிமேய்ந்து - தாமாகவே திருட்டுத்தனமாக மேய்ந்து, தருக்கி - கொழுத்து, ஈனும் - கன்று போடும், மன்னு - பொருந்திய, கொள்வோம் - வாங்குவோம், சேங்கன்று - பசுவின் ஆண்கன்று, நல்கும் - கொடுக்கும்.

'மூவணை யேருங் கட்டி
முன்னுள நிலங்க ளெல்லாம்
ஓவற வளங்க ளாக
உழுதுநாம் பயிர்கள் இட்டே
மேவுதா னியங்கள் எல்லாம்
விலைகளைக் குறைய விற்றுக்
காவலன் அறிக்கை யாலே
கனக்கவோர் வீடு கட்டி. (5)

(கு - ரை.) ஏர் - மாடு, மூவணை - மூன்று சோடி, ஓவற - நீங்காமல், காவலன் - அரசன்.

'இருந்துநாம் பணமுங் காசும்
ஏரொடு பொருளுந் தேடிப்
பொருந்திய பிராம ணர்க்குப்
போசனம் இடுவோம்; இட்டால்,
வருந்தியே நமக்குப் பெண்ணும்
வலியவே தருவார்; அந்தத்
திருந்திழை யாளும் நாமும்
செருக்கியங் கிருந்து வாழ்வோம். (6)

(கு - ரை.) திருந்து இழையாள் - சிறந்த ஆபரணங்களை உடைய பெண், செருக்கி - பெருமையுற்று.

'அப்படி யிருக்கும் நாளில்
அந்தியிற் பசுக்கள் கட்டக்
கொப்படர் கண்ணுள் செல்லக்
குழந்தையும் அழும்; நாம் ஓடி
இப்படி அடிப்போம் அங்கே!'
என்றொரு தடியெ டுத்துச்
செப்பிய பொரிமாத் தோண்டி
சிதறிட அடித்திட் டானே.

—வீரமார்த்தாண்ட தேவர்

(கு - ரை.) அந்தி - மாலை நேரம், கொப்புஅடர்கண்ணுள் - காதணியுடன் போர் செய்கின்ற கண்ணை உடையவள்.

## III. நீதிப்பகுதி

### 1. திருக்குறள்

அன்பீனு மார்வ முடைமை யதுவீனும்
நண்பென்னு நாடாச் சிறப்பு. (1)

(கு - ரை.) ஆர்வம் - விருப்பம், ஈனும் - தரும், அது - அவ்விருப்பமுடைமை, நாடாச்சிறப்பு - அளவிலாச் சிறப்பு.

தந்தை மகற்காற்று நன்றி யவையத்து
முந்தி யிருப்பச் செயல். (2)

(கு - ரை.) மகற்கு-புதல்வனுக்கு, நன்றி - செய்யும் உதவி, அவையத்து - கல்வி கேள்விகளில் சிறந்தவர் குழுமியுள்ள சபையில், முந்தியிருப்ப - (அவரினும் பார்க்க) முதலிடத்தில் இருக்கும்படி. செயல் - கல்வியுடையனாக்குதல்.

அறத்திற்கே யன்புசார் பென்ப வறியார்;
மறத்திற்கு மஃதே துணை. (3)

(கு - ரை.) அறத்திற்கே - தருமத்திற்கே, சார்பு என்ப - துணை என்பர், மறத்திற்கும் - பகையை நீக்குதற்கும்.

இனிய வுளவாக வின்னாத கூறல்
கனியிருப்பக் காய்கவர்ந் தற்று. (4)

(கு - ரை.) இனிய உளவாக - (பேசுதற்கு) இன்சொற்கள் பல இருக்க, இன்னாத - கொடும் சொற்களை, காய் கவர்ந்து அற்று - இனிமையற்ற காயைப் பறித்து உண்பது போலாம்.

சொல்லுக சொல்லிற் பயனுடைய ; சொல்லற்க
சொல்லிற் பயனிலாச் சொல். (5)

(கு - ரை.) சொல்லின் - (பேசுகின்ற) பேச்சில், பயன் இலாச் சொல் - நன்மை தரத்தக்கதல்லாத சொற்களை.

பொறுத்த லிறப்பினை யென்று ; மதனை
மறத்த லதனினு நன்று. (6)

(கு - ரை.) என்றும் - (பொறுமை எப்பொழுதும் நன்மை பயக்குமாதலால்) தம்மால் பழிவாங்கக் கூடிய காலத்தும், பொறுத்தல் - பொறுத்துக் கொள்க, இறப்பினை - ஒருவன் தனக்குச் செய்த தீங்கினை, மறத்தல் - மனத்தின்கண் வையாது அப் பொழுதே மறந்துவிடுதல்.

களவினு லாகிய வாக்க மளவிறந்
தாவது போலக் கெடும். (7)

(கு - ரை.) ஆக்கம் - செல்வம், அளவு இறந்து - அளவு கடந்து, கெடும் - (இறுதியில்) அழியும்.

தன்னெஞ் சறிவது பொய்யற்க ; பொய்த்தபின்
தன்னெஞ்சே தன்னைச் சுடும். (8)

(கு - ரை.) பொய்யற்க - (பிறர் அறியவில்லை என்று கருதி) தானறிந்ததை மறைத்துப் பேசாதிருக்க, பொய்த்த பின் - (அங் ஙனம்) பொய் பேசிய பிறகு, தன்னைச் சுடும் - தன்னை வருந்தச் செய்யும்.

கேடில் விழுச்செல்வங் கல்வி ; யொருவற்கு
மாடல்ல மற்றை யவை. (9)

(கு - ரை.) கேடுஇல் - அழிவில்லாத, விழுச்செல்வம் - சீரிய செல்வமாகக் கருதப்படுவது, ஒருவற்கு - (ஒருவன் + கு) ஒருவனுக்கு, மற்றையவை - மற்றச் செல்வங்கள், மாடு அல்ல - செல்வம் அல்ல.

எண்ணித் துணிக கருமம் ; துணிந்தபி
னெண்ணுவ மென்ப திழுக்கு. (10)

(கு - ரை.) கருமம் - (செய்ய நினைக்கும்) காரியங்களை, எண்ணித்துணிக - (செய்வதற்குமுன்) நன்ருக ஆராய்ந்து பின் செயல் ஆற்றத் தீர்மானிக்க, துணிந்தபின் - செய்யத் துணிந்த பிறகு, எண்ணுவம் - ஆய்ந்து கொள்ளலாம், இழுக்கு - தீதாம்.

## 2. நாலடியார்

### கல்வி

கல்வி கரையில ; கற்பவர் நாட்சில
மெல்ல நினைக்கின் பிணிபல ;—தெள்ளிதின்
ஆராய்ந் தமைவுடைய கற்பவே நீரொழியப்
பாலுண் குருகின் தெரிந்து. (1)

(கு - ரை.) அமைவுடைய - தகுதியுள்ள நூல்களை, குருகின் - அன்னப் பறவையைப் போல, தெளிந்து - ஆராய்ந்து.

### நட்பு

யானை யனையவர் நண்பொரீஇ நாயனையார்
கேண்மை கெழீஇக் கொளல்வேண்டும் ;—யானை
அறிந்தறிந்தும் பாகனையே கொல்லும் ; எறிந்தவேல்
மெய்யதா வால்குழைக்கும் நாய். (2)

(கு - ரை.) யானை அனையர் - யானையைப்போல நன்றியற்ற தன்மையை உடையவர், நண்பு + ஒரீஇ - நட்பை விலக்கி, கேண்மை - நட்பு, கெழீஇ - விரும்பி, மெய் - உடம்பு, குழைக்கும் - வளைத்தாட்டும்.

பாலொடு அளாயநீர் பாலாகும் அல்லது
நீராய் நிறந்தெரிந்து தோன்ருதாம் ;—தேரின்
சிறியார் சிறுமையுந் தோன்ருதாம் நல்ல
பெரியார் பெருமையைச் சார்ந்து. (3)

—சமண முனிவர்

(கு - ரை.) அளாய - கலந்த, தேரின் - ஆராய்ந்தால், சார்ந்து - கூடி.

## 3. இனியவை நாற்பது

கொல்லாமை முன்னினிது கோல்கோடி மாராயஞ்
செய்யாமை முன்னினிது செங்கோல னாகுதல்
எய்துந் திறத்தா லினிதென்ப யார்மாட்டும்
பொல்லாங் குரையாமை நன்கு. (1)

(கு - ரை.) முன் இனிது - மிக நல்லது, கோல் கோடி - நடுவு நிலைமை தவறி, மாராயம் - சிறப்பு, செங்கோலன் ஆகுதல் - முறை செலுத்துவோனாதல், எய்துந்திறத்தால் - கூடிய மட்டில், பொல்லாங்கு - குற்றம்.

கற்றார்முற் கல்வி யுரைத்தன் மிகவினிதே
மிக்காரைச் சேர்தன் மிகமாண முன்னினிதே
எட்டுணை யானு மிரவாது தானீத
லெத்துணையு மாற்ற வினிது. (2)

(கு - ரை.) மிக்கார் - அறிவான் மேம்பட்டார், மிகமாண - மிகமாட்சிமைப்பட, முன்இனிது - முற்படவினிது, எள்துணை யானும் - (எள் + துணை) எள்ளளவாயினும், எத்துணையும் - எல்லாவிதத்தானும், ஆற்ற இனிது - மிக இனிது.

பிச்சைபுக் காயினுங் கற்றன் மிகவினிதே
நற்சபையிற் கைகொடுத்தல் சாலவு முன்னினிதே
முத்தேர் முறுவலார் சொல்லினி தாங்கினிதே
தெற்றவு மேலாயார்ச் சேர்வு. (3)

—பூதஞ்சேந்தனார்

(கு - ரை.) பிச்சை புக்கு ஆயினும் - பிச்சை யெடுத்து உண்டாயினும், நல்சபையில் - நல்ல அவையின்கண், கை கொடுத்தல் - உதவுதல், முத்துஏர் முறுவலார் - முத்தை யொக்கும் பற்களையுடைய மகளிரது, சொல் - வாய்ச் சொல், ஆங்கு - அதுபோல, மேலாயார்ச் சேர்வு - பெரியோரைத் துணைக் கொள்ளுதல், தெற்றவும் இனிது - தெளியவு : மினிது.

## 4. திரிகடுகம்

### நன்மை பயவாதன

கணக்காயர் இல்லாத ஊரும், பிணக்கறுக்கும்
மூத்தோரை இல்லா அவைக்களனும்—பாத்துண்ணும்
தன்மையி லாளர் அயலிருப்பு மிம்மூன்றும்
நன்மை பயத்தல் இல. (1)

(கு - ரை.) கணக்காயர் - உபாத்தியாயர் (அறிஞர்), பிணக்கு - மனவேற்றுமை, அவைக்களம் - சபை, பாத்துண்ணும் - பகிர்ந்து உண்ணும், அயல் இருப்பு - அண்டையிற்குடியிருத்தல், பயத்தல் - உண்டாக்குதல்.

### இறந்தும் இறவாதவர்

மண்ணின்மேல் வான்புகழ் நட்டானும், மாசில்சீர்ப்
பெண்ணினுட் கற்புடையாள் பெற்றானும்,—உண்ணுநீர்க்
கூவல் குறைவின்றித் தொட்டானும் இம்மூவர்
சாவா உடம்பெய்தி னர். (2)

(கு - ரை.) வான்புகழ் - உயர்ந்தபுகழ், நட்டான் - நிலை நாட்டியவன், மாசுஇல் - குற்றமற்ற, கூவல் - கிணறு, தொட்டான் - தோண்டியவன், சாவா உடம்பு - புகழுடம்பு.

### பயனில் செயல்கள்

வெல்வது வேண்டி வெகுண்டுரைக்கும் நோன்பிலியும்,
இல்லது காமுற் றிருப்பானும்,—கல்வி
செவிக்குற்றம் பார்த்திருப் பானுமிம் மூவர்
உமிக்குற்றிக் கைவருந்து வார். (3)

—நல்லாதனார்

(கு - ரை.) வெகுண்டு - கோபித்து, நோன்பிலி - விரதமில்லாதவன், காமுற்று - ஆசைகொண்டு, செவிக்குற்றம் - கேள்விக்குற்றம்.

# IV. பல்சுவைப்பகுதி

## 1. பெய்யாத மேகத்திடம் பேசியது

செல்லென்றுன் நாமத்தைச் செப்பினதே அல்லாமல்
செல்லென் றுனை நாங்கள் செப்பினமா ?—அல்லென்று
மெய்யா உவமிக்க விண்மீது தோன்றியநீ
பெய்யாமற் போனதென்ன ? பேசு.

—வேதநாயகம் பிள்ளை

(கு - ரை.) செல் - மேகம் (போவாய்), நாமம் - பெயர், அல் - இருள், விண் - ஆகாயம்.

## 2. சீதக்காதி இறந்தபோது பாடியது

பூமா திருந்தென்ன ? புவிமா
திருந்தென்ன ? பூத லத்தில்
நாமா திருந்தென்ன ? நாமிருந்
தென்ன ? நன் னுவ லர்க்குக்
கோமான் அழகமர் மால்சீதக்
காதி கொடைமி குந்த
சீமான் இறந்திட்ட போதே
புலமையும் செத்ததுவே.

—படிக்காசுப் புலவர்

(கு - ரை.) பூமாது - திருமகள், புவி மாது - நிலமகள். பூதலம் - உலகம், நாமாது - கலைமாது, நல் + நாவலர் - நல்ல கவிவாணர், கோமான் - தலைவன், அழகு அமர் - அழகமைந்த, மால் - பெருமை, சீதக்காதி - ஒரு பிரபு, சீமான் - பெருஞ் செல்வன்.

## 3. எல்லோருக்கும் விசனம் உண்டு

பாலுக்குச் சர்க்கரை இல்லையென்
பார்க்கும், பருக்கையற்ற
கூழுக்குப் போடஉப் பில்லையென்
பார்க்கும், குற்றித்தைத்த

காலுக்குத் தோற்செருப் பில்லையென்
பார்க்கும், கனகதண்டி
மேலுக்குப் பஞ்சணை இல்லையென்
பார்க்கும் விசனமொன்றே.

—கம்பர்

(கு - ரை.) குற்றித் தைத்த - தைத்த தோற் செருப்பென மாறுக. கனகதண்டி - பொன் பல்லக்கு, பஞ்சு + அணை - பஞ்சு மெத்தை, விசனம் - துன்பம்.

## 4. தமிழ்நாடு

கம்பன் எனுங்கவிக் குஞ்சரத் தோடுநல்
காளமே கன் ஒட்டக் கூத்தனும்சீர்
பொங்கு புகழேந்தி வள்ளுவன் ஔவையிப்
புலவர் பிறந்த தமிழ்நாடே.
போரில் புறங்கொடா வீரர்க ளும், பல
காரில் சிறந்தகை வள்ளல்களும்
பாரில் மழைகாணும் பாவைய ரும்பெரும்
சீரின் உறைந்த தமிழ்நாடே.

—வித்துவான் மே. வி. வேணுகோபால் பிள்ளை

(கு - ரை.) (காரில் - மேகம் போல).

# UMA VACHAKAM

(TAMIL)

BOOK VII—STANDARD VII


KALAIVANI BOOK CENTRE

130, TRINCOMALI STREET, KANDY.


 [*Price Rs.* 1/25